விசாகப்பெருமாளையரியற்றிய

# அணியிலக்கணம்.





ரிப்பன் பிரஸ், சென்னை.] [விலை அணா-4.

உ

கடவுள்துணை.

# அணியிலக்கணம்.

திருத்தணிகை
விசாகப்பெருமாளையரவர்கள்
இயற்றியது.

S. அனவரதவிநாயகம் பிள்ளை, M. A., L. T.,
அவர்கள் பரிசோதித்தது.

சென்னை:
ரிப்பன் அச்சியந்திரசாலையிற்
பதிப்பிக்கப்பட்டது.

1906.

விலை அணா-4.

# அணியிலக்கணப் பதிப்புரை.



சென்ற நூற்றாண்டின் முற்பகுதியில், இச்சென்னைமாநகரில், திருத்தணிகை விசாகப்பெருமாளைய ரெனவும், சரவணப் பெருமாளைய ரெனவும் இருவர் புலவர் விளங்கினர். இவ்விருவரும் திருவாவடுதுறைக் கச்சியப்ப முனிவரிடத்திற் றமிழ்கற்ற திருத்தணிகைக் கந்தப்பையரென்னும் வீரசைவ சிகாமணியின் செல்வக் குமாரர்கள். இவர்கள் தமிழ்க்காகச் செய்த நன்மையை அளவிட்டுரைக்க முடியாது. திருக்குறள் நைடதம் பிரபுலிங்கலீலை முதலிய நூல்களுக்கு உரைசெய்து வைத்ததன்றி இலக்கணத்தை விளக்கச் சில நூல்களும் இவர்கள் பெயரால் வெளிவந்திருக்கின்றன. தற்காலத்து ஜனுபிப்பிராயத்தை யொட்டி இலக்கணத்தை யிருவர் தலையிலும் ஏற்றவேண்டியிருக்கிறதே யொழிய அச்சிட்டுக்காணும் நூலகத்து இதற்கு ஆதாரம் சிறிதுமில்லை.

கி. பி. 1828 - ல் வெளிப்பட்ட இலக்கணச்சுருக்க வினுவிடை யென்னும் நூல் மிக விரிந்தது. எழுத்துச் சொற் பொருள் யாப்பு அணியென்னும் ஐந்திலக்கணங்களையும் எடுத்துச்சொல்வது. இந்நூல் திருத்தணிகை விசாகப்பெருமாளையர் பெயரால் வெளிப்பட்டிருக்கின்றது. இந்நூற்குச் சிறப்புப்பாயிரம் "இந்நூலாசிரியர் விசாகப்பெருமாளையர்க் கிளவலாகிய சரவணப்பெருமாளையராற் சொல்லப்பட்டது" என அந்நூன் முதற்பக்கங்களிற் பொறிக்கப்பட்டுமுளது. நூலாசிரியர் தற்சிறப்புப்பாயிரங் கூறும் பொழுதும் "அலகில் சீரெழுத் தாதியைந் தறைகுவ னமைந்தே" என்றனர். அணியிலக்கணம் அது காறும் தமிழினுள்ள அணியிலக்கணங்களைத் தழுவாது வடமொழிச் சந்திராலோகத்தைப் பின்பற்றி எழுதப்பட்டபடியால் இலக்கணச்சுருக்க வினுவிடை யாசிரியர் வடமொழி வல்லாருதவிபெற்று அப்பாகத்தை யெழுதினரென்பதற்கு "இதனுள் அணியிலக்கணம் புதூர் சீதாராம சாஸ்திரியாராற் பரிசோதிக்கப்பட்டது"

என்னும் வாக்கியம் சான்று பகரும். இதனாலெல்லாம் விசாகப்பெருமாளையரே வினாவிடை முழுதிற்கும் ஆசிரியரென்பதும், சரவணப்பெருமாளையர் ஆசிரியரல்லரென்பதும் தெளிவாக விளங்கும்.

இனி, சின்னாட் சென்றபின் வினாவிடைக்கண் தமிழ் கற்பார் ஆதரம் குன்றியதுபோலும், வினாவிடை யாசிரியர் தாமே பாலபோதவிலக்கணம் என வேறொரு நூல் செய்தனர். இந்நூலின் ஐந்தாம் பதிப்பு கி. பி. 1870 - ல் அச்சிடப்பட்டது ஒரு பிரதிகண்டேன். இப்பாலபோத விலக்கணத்து யாப்பும் அணியும் காணப்படினும், எழுதியவர் எழுத்துஞ் சொல்லுந்தான் எழுதியதாகத் தோன்றுகின்றது. இதற்கு அதனுள், "இந்நூல், எழுத்ததிகாரம், சொல்லதிகாரம், புணர்ச்சியதிகாரம், தொடர்மொழி யதிகாரம் என நான்கதிகாரங்களாக வகுக்கப்படும்" என்னும் வாக்கியமே சான்று. அன்றியும், தொடர்மொழி யதிகாரத் திறுதியில் "தொடர்மொழி யதிகாரம் முற்றுப்பெற்றது. திருத்தணிகைக் கந்தப்பையர் குமாரராகிய விசாகப்பெருமாளையரால் இயற்றப்பட்ட பாலபோத விலக்கணம் முடிந்தது முற்றும்" என்று வரும் வாக்கியமும் இதனை நிறுத்தும். யாப்பதிகாரமும் அணி யதிகாரமும் வினாவிடையி லுள்ள படியே வினாக்களை மட்டுந் தள்ளி அச்சிட்டுச் சேர்க்கப்பட்டன போலும்.

வடமொழியலங்கார சாஸ்த்ரத்தைப் பின்பற்றிச் செய்த இவ்வணியதிகாரத்துள் பொருளணிகள் நூற்றினிலக்கணமும் சேர்வையணி கலவையணிகளி னிலக்கணமுங் கூறப்பட்டன. வடமொழிச் சுலோகங்களின் மொழிபெயர்ப்பும் தமிழ் நூல்களினின் றெடுக்கப்பட்டனவுமாய் உதாரணச் செய்யுள்கள் 220-வரை காணப்படுகின்றன.

இந்நூலாசிரியர் விளங்கியது சென்ற நூற்றாண்டிலாயினும் இவரது சரித்திரம் யாண்டும் கோத்து எழுதப்பட்டிராமை நம்மனோர்க்குப் பொதுவாகச் சரித்திரங்களிடத்துள்ள

அசிரத்தையைக் காட்டும். இவ் வணியிலக்கணத்தைச் சில வாண்டுகளின் முன் தனிநூலாக வெளிப்படுத்திய தமிழ்ப் பண்டிதர் ஈக்காடு இரத்தினவேலு முதலியாரவர்கள் இந்நூலாசிரியரது பிறப்பு வரலாற்றை ஒருவாறு கூறியிருக்கின்றனர். அது வருமாறு. "திருத்தணிகைப் பதியில், வீரசைவ குலோத்பவராய்க் கல்வியறி வொழுக்கங்களிற் சிறந்து, திருவாவடு துறையாதீனத்துக் கச்சியப்பமுனிவர் வழியி லிலக்கிய விலக்கணங்களை யாராய்ந்த கந்தப்பையரென்பவ ரொருவரிருந்தனர். அவர் இல்லறமேற்கொண்டு சில்காலொழுகி மகப்பேறடையாது மனமாழ்கி, தன் மனைவி தெய்வயானையம்மையோடுடன் பிறந்த வள்ளியம்மையையு மணந்து பின்னுஞ் சிலவருடங்கள் கழித்து, இருவரி லொருவர்பாலும் புத்திரோற்பவங் கைகூடாது கவலைக்கடலுளாழ்ந்து, தமது சீடர்கட்குக் கல்வி பயிற்று வதிலேயே மனத்தைச்செலுத்தி ஒருவாறு துணிவு கொண்டனர்.

"இவரிங்ஙனமிருக்க: இவர் மனைவியரிருவருந் தணிகையம்பதிக் கருகிலுள்ள ஊருணி யொன்றினின்று நீர் முகந்துவரச் செல்லுகையில், அவர்கள் கட்புலனுக்குத் தோற்றிய வேங்கடமலையை நோக்கித் தணிகாசலபதியை வெறுத்தார் போல, இச்செங்கல்வராயனுக்கு நம்மீது கருணையில்லைபோலும், இனி வேங்கடத் திறைவனேனும் நமக்கு நன்மக்களை யருளானோ வெனச் சம்பாஷித்துச்சென்று, நம்மிடத்துக்குழந்தை யுதிப்பின், திருமாலின் பெயரை யதற் களித்துமெனத் தீர்மானித்துக்கொண்டு வீட்டையடைந்தனர். சின்னாட் சென்ற பின்னர் அவ்விரு சகோதரிகளுங் கருப்பவதிகளாய் முறையே ஒவ்வொருஆண்மகவைப் பெற்றனர். அப்பிள்ளைகள் ஒருவர்க்கொருவர் ஒருநாளின் வித்தியாசத்தாலேயே மூத்தோ ரிளையோ ரெனப்பட்டனர். அவ்விரு சிறார்க்கும் தந்தை தமது மரபின்படி விசாகன் சரவணன் என நாமகரணஞ் செய்ய யத்தனிக்கையில், அவர் மனைவியர் திருப்பதி மலையைக்கண்டு தங்களுட்டீர்மானித்த வகையை வெளியிட, ஐயர

வர்கட் கிணங்கித் தாம் விரும்பிய நாமங்களுடன் பெருமா ளென்பதைப் புணர்த்தினர். அதனால் விசாகப்பெருமாளையர் சரவணப்பெருமாளையரென வழைக்கப்பட்டனர்.

"இச்சகோதரர்களிருவரும் மிக்க ஒற்றுமை யுடையரா ய்த் தமது தந்தையாரிடம் பலநூல்களைக் கற்று, பின்னர்ச் சென்னை நகரை யடைந்து சஞ்சீவிராயன்பேட்டையில் வா ழ்ந்திருந்த இலக்கணக்கடலாகிய இராமாநுஜ கவிராயரிடம் நன்னூன் முதலிய பன்னூல்களும் பயின்று கற்றோர் மதிக் கத்தக்க வித்துவசிகாமணிக ளாயினர்."

இவ்விருவருள் விசாகப்பெருமாளையர் நெடுங்காலம் சென்னை யூனிவர் ஸிட்டி யென்னும் சகல சாஸ்திர கல்விச் சாலையில் தமிழ்த்தலைமைப் புலமை நடாத்தினர். சரவணப் பெருமாளையர் சில காலம் நூல்கள் செய்துகொண்டும் மாண வர்க்குப்பாடஞ் சொல்லிக்கொண்டு மிருந்து இளமையிலே யே காலஞ்சென்றனர். பல வேதாந்த நூல்கள் செய்தவரும் சில நூல்களுக்கு விருத்தியுரை செய்தவருமாகிய ஈரூர் சச்சி தானந்த பிள்ளையென்பவர் இவரிடத்துத் தமிழ் கற்றவரு ளொருவர். நன்னூற்கு முதலிற் காண்டிகையுரை செய்தவர் விசாகப்பெருமாளையர் என்பதும் ஞாபகத்தில் வைக்கத்தக் கது. இது வெளிப்பட்ட பின்னர்த்தான் இவராசிரியர் இரா மாநுஜ கவிராயர் இராமாநுஜ காண்டிகை யெனப்படும் விரு த்தியுரை யொன்று செய்து கி. பி. 1847-ல் வெளிப்படுத்தி னர்போலும். ஆறுமுக நாவலர் காண்டிகையும் பின்னர் வெ ளிப்பட்டதுவே.

தமிழ்ப்பண்டிதர் இரத்தினவேலுமுதலியாரவர்கள் பதி ப்பு அகப்படுத லருமையாய் விட்டபடியாலும், மதுரைத் தமிழ்ச் சங்கப்பதிப்பு கருநாடக வொழுங்கை யநுஸரித்திரு ப்பதால் தற்கால மாணவர்க்குப் பெரும்பயன் செய்யாமை யானும் இப்பதிப்பு வெளிப்படுத்தலாயிற்று. **S. A. P.**

---

# அணியகராதி

## (ஸம்ஸ்க்ருத நாமங்களுடன்).

——(०)——

உ

கடவுள்துணை.

# அணியிலக்கணம்.

அணி யென்பது செய்யுட்கு அழகு செய்துநிற்பதாம்.

அவ்வணி பொருளணியுஞ் சொல்லணியுமென இருவகைப்படும். இவ்விரண்டினும் பொருளணியே சிறப்புடைத்தாம்.

## பொருளணி.

அப்பொருளணி உவமையணிமுதல் ஏதுவணி இறுதியாக நூறும். அவற்றிற்கு முறையே பெயரும் விதியும் உதாரணமும் வருமாறு:—

### 1. உவமையணி.

அஃதாவது, இரண்டு பொருள்களுக்கு ஒப்புமையை விளங்கச் சொல்லுதலாம். இதனை வடநூலார் உபமாலங்காரமென்பர். இவ்வணி விரியுவமையுந் தொகையுவமையு மென இருவகைப்படும்.

#### (1). விரியுவமை.

உபமானமும் உபமேயமும் பொதுத்தன்மையும் உவமையுருபும் ஆகிய நான்கும் விரிந்துவருவதாம்.

உ-ம். "பால்போலு மின்சொற் பவளம்போற் செந்துவர்வாய்ச்
சேல்போற் பிறழுந் திருநெடுங்கண்-மேலாம்
புயல்போற் கொடைக்கைப் புனனாடன் கொல்லி
யயல்போலும் வாழ்வ தவர்."

இதில், பால்போலும் இன்சொல் என்புழி, பால் - உபமானம், சொல்-உபமேயம், இனிமை-பொதுத்தன்மை, போலும்-உவமையுருபு.

(2). தொகையுவமை.

உபமேயம் ஒழிந்த மூன்றனுள் ஒன்றும் பலவுந்தொகுதலா லாகிய ஏழுமாம். அவை உருபுத்தொகை, பொதுத்தன்மைத்தொகை, பொதுத்தன்மை யுருபுத்தொகை, உபமானத்தொகை, உருபுபமானத்தொகை, பொதுத்தன்மையுபமானத்தொகை, பொதுத்தன்மையுருபுபமானத்தொகை எனப் பெயர்பெறுமென் றறிக.

உ-ம். "புயற்கருங் குழலாள் காந்தட்போதினை நிகர்க்குங் கையாள்
கயற்கணாள்முகத்திற்கொப்பாங்காந்திகொள் பொருளுண்டோ
நயச் சிவப்புளதொன்றில்லை நாசிபோல்வதுமற்றுகும் [வாய்
குயிற்கிளவியினாள்பாவைகுணத்தையார்குறிக்கவல்லார்."

இதில் அவ்வேழும் முறையே காண்க.

[முறை:
புயற்கருங்குழலாள்.
காந்தட்போதினை நிகர்க்குங்கையாள்.
கயற்கணாள்.
முகத்திற் கொப்பாங் காந்திகொள் பொருளுண்டோ?
வாய்நயச்சிவப்புளதொன்றில்லை.
நாசிபோல்வதும் அற்றுகும்.
குயிற்கிளவியினாள்.]

காந்திகொள் பொருளுண்டோ என்புழி, பொருள் உலகத்தில் உளதாகவும் இல்லையெனலால் உபமானத்தொகையாயிற்று. குயிற்கிளவியினாள் என்புழி, குயிலினது இசைபோலும் மதுரமாகிய கிளவியினாள் என விரித்துரைக்க வேண்டுதலால், குயிலினது இசை உபமானமாம்.

வடநூலார் பொதுத்தன்மையை ஸாதாரண தர்மமென்றும், உவமையுருபை உபமாவாசகமென்றும், ஒப்புமையை ஸாம்யமென்றும் ஸாத்ருசியமென்றுங் கூறுவர்.

"போலப் புரைய ஒப்ப உறழ
மானக் கடுப்ப இயைய ஏய்ப்ப
நேர நிகர அன்ன இன்ன
என்பவும் பிறவும் உவமத் துருபே."

## 2. இயைபின்மையணி.

அஃதாவது, ஒருவாக்கியத்துள் ஒரு பொருளையே உபமானமாகவும் உபமேயமாகவுஞ் சொல்லுதலாம். இதனை வடநூலார் அநந்வயாலங்காரமென்பர். தண்டியாசிரியர் பொதுநீங் குவமை யெனபர்.

உ-ம். "தேனே யனையமொழிச் சேயிழையாள் செவ்வியினற்
றானே யுவமை தனக்கு."

இதில், இப்பொருளுக்கு ஒப்பு இரண்டாவது ஒன்றில்லையென்பது கருத்து.

## 3. புகழ்பொருளுவமையணி.

அஃதாவது, இரண்டு வாக்கியங்களுள் முன்னதில் உபமானமாகச் சொல்லப்பட்டதைப் பின்னதில் உபமேயமாக்கியும், உபமேயமாகச் சொல்லப்பட்டதை உபமானமாக்கியுஞ் சொல்லுதல். இதனை வடநூலார் உபமேயோபமாலங்காரமென்பர். தண்டியாசிரியர் இதரவிதரமென்பர்.

உ-ம். "நின்புடை யறநிகர்த் தோங்கு நீள்பொரு
ளின்புடைப் பொருணிகர்த் தோங்கு மெய்தறந்
தன்புடைக் கடலுடைத் தரணி யோர்க்கெலா
மன்புடை முறைசிறந் தளிக்கு மண்ணலே." என வரும்.

அன்றியும்,

"களிக்குங் கயல்போலு நின்கணின் கண்போற்
களிக்குங் கயலுங் கனிவாய்த்-தளிர்க்கொடியே
தாமரை போன்மலரு நின்முக நின்முகம்போற்
றாமரையுஞ் செவ்வி தரும்."

எனத் தொன்று தொட்டுவரும் உபமாநோபமேயங்களை அவ்வாறு சொல்வதும் அது. இதன்கருத்து மூன்றுவது ஒப்பது ஒன்று இன்று என்பதாம்.

உபமேயம் வர்ணியமென்றும், புகழ்பொருளென்றும், புனைவுளியென்றும்; உபமானம் அவர்ணியமென்றும், அல்பொருளென்றும், புனைவிலி யென்றுஞ் சொல்லப்படும்.

## 4. எதிர்நிலையணி.

அஃதாவது, உபமானத்திற்குக் குறைவுதோன்றச் சொல்லுதலாம். இது உவமையணிக்கு எதிரியதாய் நிற்றலின் அப்பெயர்த்து. இதனை வடநூலார் ப்ரதீபாலங்காரமென்பர். இவ்வணி ஐந்துவகைப்படும்.

(1). உலகத்தில் உபமானமாய்ப் பிரசித்தமாக வழங்குகின்ற பொருளை உபமேயமாக்கிச் சொல்லுதல்.

உ-ம். "அதிர்கடல்சூழ் வையத் தணங்குமுகம் போல
மதியுஞ் செயுமே மகிழ்."

(2). அவர்ணியத்தை உபமேயமாகக் காட்டி வர்ணியத்தை இகழ்தல்.

உ-ம். "பொன்செருக்கை மாற்றமெழிற் பூவை திருமுகமே
யுன்செருக்குப் போத மொழிகவினிக் - கொன்செருக்கு
மிக்கமக ரக்கடற்பூ மிக்கண் மகிழ்செயலா
லொக்கு மதியு முனை."

(3). வர்ணியத்தை உபமேயமாகக்காட்டி அவர்ணியத்தை இகழ்தல்,

உ-ம். "ஆற்ற லுறுகொலேயி லாரெனக்கொப் பென்றந்தோ
கூற்றுவநீ வீண்செருக்குக் கொள்கின்றாய் - சாற்றுவல்கேள்
வெண்டிரைசூழ் ஞால மிசையுனக்கொப் பாகவே
யொண்டொடிதன் னீள்விழியு முண்டு."

(4). வர்ணியத்தோடு அவர்ணியத்திற்கு ஒப்புமை இன்றெனச் சொல்லுதல்.

உ-ம். "இறைவி மதுரமொழிக் கின்னமுதொப் பாமென்
றறைவ தபவாத மாம்."

(5). உபமானத்தை வீணென்று சொல்லுதல்.

உ-ம். "செங்கயற்க ணுயுன் றிருமுகத்தைப் பார்ப்பவர்க்குப்
பங்கயத்தா லுண்டோ பயன்."

## 5. உருவகவணி.

அஃதாவது, உபமேயத்தில் உபமானத்தை ஒற்றுமையினாலாவது அதன் செய்கையினாலாவது ஆரோபித்தலாம். இதனை வடநூலார் ரூபகாலங்கார மென்பர். ஆரோபமாவது உபமான உபமேயங்களின் அபேதவுணர்ச்சி. இவ்வணி ஒற்றுமை யுருவகம், அதன்செய்கை யுருவகம் என இருவகைப்படும். இவற்றை வடநூலார் அபேதரூபக மென்றும், தாத்ரூப்யரூபகமென்றுங் கூறுவர். அவ்விரண்டும் மிகை, குறை, அவையின்மை என்பவைகளான் மும்மூன்றாம்.

(1). மிகையொற்றுமை யுருவகம்.

உ-ம். "உயர்புகழ்நங் கோனு முருவுடைய மார
னயவழகை நாடுமென் கண்."

இதில், மாரனுக்கு உருவம் மிகையாகச் சொல்லப்பட்டது.

(2). குறையொற்றுமை யுருவகம்.

உ-ம். "எல்லாரு மேத்துபுக ழேந்தலிவ னெற்றிவிழி
யில்லாத சங்கரனே யாம்."

இதில், சங்கரற்கு நெற்றிக்கண் குறைவாகச் சொல்லப்பட்டது.

(3). அவையிலோற்றுமை யுருவகம்.

உ-ம். "பவக்கடல் கடந்து முத்தியங் கரையிற்
படர்பவர் திகைப்பற நோக்கித்
தவக்கல னடத்த வளர்ந்தெழுஞ் சோண
சைலனே கயிலைநா யகனே."

இதில், கடல்முதலியவை மிகை குறைவின்றிச் சமனுகச் சொல்லப்பட்டன.

(4). மிகையதன்செய்கை யுருவகம்.

உ-ம். "மங்கை வதன மதியங் களங்கமுடைத்
திங்களைமிக் கெள்ளல் செயும்."

இதில், முகமதிக்குக் களங்கமில்லாமை அதிகமாகச் சொல்லப்பட்டது. ஈண்டு முகமதி யென்பதற்குச் சந்திரனது செய்கையையுடைய முகமெனப் பொருள் கொள்க.

(5). குறையதன்செய்கை யுருவகம்.

உ-ம். "பொருதிரைசேர் தண்பாற் புணரிபிற வாவே
ரொருதிருவிம் மாதென் றுணர்."

இதில், இத் திருவுக்குப் பாற்கடலிற் பிறத்தல் குறைவாகச் சொல்லப்பட்டது.

(6). அவையிலதன்செய்கை யுருவகம்.

உ-ம். "இம்மான் முகமதியே யின்பு செயுமதனு
லம்மா மதிப்பயனென் னும்."

இதில், முகமதிக்கு மிகையுங் குறையுஞ் சொல்லாமற் சமஞ்செய்தது காண்க.

## 6. திரிபணி.

அஃதாவது, உபமானப்பொருளானது அப்பொழுது நிகழ்கின்ற செய்கையிற் பயன்படுதற்பொருட்டு உபமேயத்தின் உருவத்தைக்கொண்டு பரிணமித்தலாம். இதனை வடநூலார் பரிணமாலங்கார மென்பர்.

உ-ம். "செய்ய வடிக்கமலத் தாலத் திருந்திழையாள்
பைய நடந்து பசும்பொழிலுற்-றய்ய
வலர்கட் குவளையினு னோக்கியகத் தன்பிற்
சிலசொற் றனளே தெரிந்து."

இதில், கமலமுங் குவளையுமாகிய உபமானப் பொருள்கள் நடத்தலு நோக்கலுமாகியசெய்கையி லுபயோகித்தற்கு உபமேய ரூபத்தைக் கொண்டு திரிந்தன. அடியுருக்கொண்டு திரிந்த கமலமெனவும், கண்ணுருக்கொண்டு திரிந்த குவளையெனவும் விரித்துரைத்துக்கொள்க.

## 7. பலபடப்புனைவணி.

இதனை வடநூலார் உல்லேகாலங்காரமென்பர். இவ்வணி இருவகைப்படும்.

(1). ஒரு பொருளிற் பலரும் பலதருமங்களினாலே பல பொருள்களை யாரோபித்தல்.

உ-ம். "ஆரணங் காணென்ப ரந்தணர் யோகிய ராகமத்தின்
காரணங் காணென்பர் காமுகர் காமநன் னூலதென்ப
ரேரணங் காணென்ப ரெண்ண ரெழுத்தென்ப ரின்புலவோர்
சீரணங்காயசிற்றம்பலக்கோவையைச்செப்பிடினே" எனவரும்.

(2). ஒருவரே ஒருபொருளில் விஷய பேதங்களாற் பலபொருள்களை யாரோபித்தல்,

உ-ம். "செல்வ மதிற்றனதன் செப்புகொடை யிற்கன்னன்
கல்விதனிற் சேடனிவன் காண்." என வரும்.

"தருமன் றண்ணளி யார்றன தீகையால்
வருணன் கூற்றுயிர் மாற்றலின் வாமனே
யருமை யாலழ கிற்கணே யைந்துடைத்
திரும கன்றிரு மாநில மன்னனே." இதுவும் அது.

## 8. நினைப்பணி.

அஃதாவது, ஒருபொருளைக்கண்டு ஒப்புமையினாலே மற்றொருபொருளை நினைத்தலாம். இதனைவடநூலார் ஸ்மிருதிமதலங்கார மென்பர்.

உ-ம். "காதலுறு கஞ்சமலர் கண்ட வெனதுமனங்
கோதைமுகந் தன்னைநினைக் கும்."

## 9. மயக்கவணி.

அஃதாவது, ஒப்புமையினாலே ஒருபொருளை மற்றொருபொருளாக அறிதலாம். இதனை வடநூலார் ப்ராந்திமதலங்கார மென்பர். பிராந்தியாவது அது ஆகாததை அதுவென அறிதல்.

உ-ம். "மழைக்கண் மங்கையர் பயிறர மரகத மணியி
னிழைத்த செய்குன்றின் பைங்கதிர் பொன்னிலத் தெய்தக்
குழைத்த பைந்தரு நீழலிற் குலவுமா னினங்க
டழைத்த புல்லென விரைவொடு தனித்தனி கறிக்கும்."

இதில், மரகத மணிக்கதிரைப் புல்லென அறிந்தது.

## 10. ஐயவணி.

அஃதாவது, ஒப்புமையினாலே ஒருபொருளைக்கண்டு இதுவோ அதுவோவெனச் சந்தேகித்தலாம். இதனை வடநூலார் ஸந்தேஹாலங்கார மென்பர்.

உ-ம். "தாதளவி வண்டு தடுமாறுந் தாமரைகொன்
மாதர் விழியுலவும் வாண்முகங்கொல்—யாதென்
றிருபாற் கவர்வுற் றிடையூச லாடி
யொருபாற் படாதென் னுளம்." என வரும்.

## 11. ஒழிப்பணி.

அஃதாவது, ஒருதருமத்தை யாரோபித்தற் பொருட்டு ஒரு தருமத்தை மறுத்தலாம். இதனை வடநூலார் அபஹ்நுத்யலங்கார மென்பர். [வடநூற்படி ஒளிப்பணியாம்.] இவ்வணி அறுவகைப்படும்.

### (1). வேற்றொழிப்பு.

அஃதாவது, உபமான தருமத்தை யாரோபித்தற்கு உபமேயதருமத்தை யொழித்தலாம்.

உ-ம். "மதியன் றிதுபுகலின் வானதியிற் றோன்றும்
புதியதொரு வெண்கமலப் பூ."

### (2). காரணவொழிப்பு.

அஃதாவது, மேற்சொல்லப்பட்ட ஒழிப்பே காரணத்தோடு கூடிவருதலாம்.

உ-ம். "போங்கு வெம்மை பொழிதலி னுலிது
திங்க ளன்று தினகரன் றானன்று
கங்கு லாதலி னுற்கட னின்றெழீஇத்
தங்கு றும்வட வைத்தழ லாகுமே."

### (3). வேறுபாட்டொழிப்பு.

அஃதாவது, வர்ணியத்தி லாரோபித்தற் பொருட்டு மற்றொரு பொருளின் தருமததை யொழித்தல்.

உ-ம். "தெரியு மிதுதிங்க ளன்று செழும்பூ
ணரிவைமுக மேதிங்க ளாம்."

இதில், திங்களின் தருமம் அதனிடத்து ஒழிக்கப்பட்டு வர்ணியமாகிய முகத்தில் ஆரோபிக்கப்பட்டது.

### (4). மயக்கவொழிப்பு.

அஃதாவது, ஒருபொருளை மற்றொரு பொருளென்று கொள்ளும் பிராந்தியை உண்மைகூறி யொழித்தல்.

உ-ம். "மனக்கினிய தோழி மடந்தைமுக நோக்கி
யுனக்குடலி னென்றியெழு வெப்பந்—தனக்குச்
சுரநோயோ காரணநீ சொல்லெனவ தான்று
பொருமார னென்றனளப் பொன்."

இதில், மன்மதாவத்தையி லுண்டாகிய சுரப்பிராந்தி மாரனென்று கூறி யொழிக்கப்பட்டது.

### (5). வல்லோரோழிப்பு.

அஃதாவது, பிறர் ஐயமுற்று வினவிய தஞ்சொல்லின் உண்மைப்பொருளை வல்லோர் அச்சொல்லுக்கு மற்றொரு தாற்பரியத்தைக் கற்பித்து மறுத்தல்.

உ-ம். "இலங்கயிற்க ளுளிகுளைக் கென்காலைப் பற்றிப்
புலம்பியதுண் டென்று புகல - விலங்கியய
னின்றுவரு மற்றொருத்தி நின்கணவ னேவென்ன
வன்றுசிலம் பென்று ளவள்."

### (6). வஞ்சகவோழிப்பு.

அஃதாவது, பெயர் முதலிய சொற்களால் வர்ணியத்தி னது தருமத்தை மறுத்தல். வஞ்சகம் - கபடம்.

உ-ம். "இம்மடந்தை கட்கடைநோக் கென்னும் பெயரினைக்கொண்
டம்மதவேள் வாளி யடும்."

## 12. தற்குறிப்பணி.

அஃதாவது, ஒருபொருளை மற்றொருபொருளினது தரும சம்பந்தத்தினாலே இஃது அஃதன்று என்று தெரிந்திருந் தும் அப்பொருளாக அத்தியவசயித்தலாம். இதனை வடநூலார் உத்ப்ரேக்ஷாலங்காரமென்பர். அத்தியவசாயமாவது ஒரு பொருளில் மற்றொருபொருளின் அபேதத்தை ஐயத் துட னறிதல். அத்தியவசாயம், சம்பாவனை, தற்குறிப்பு, உத்ப்ரேக்ஷை என்பன ஒருபொருட்சொற்கள். ஒருபொரு ளெனப் பட்டதை விஷயமெனவும் புலமெனவும், மற்றொரு

பொருளெனப்பட்டதை விஷயியெனவும் புலங்கொளியென வுஞ் சொல்லுவர். போல-நினைக்கின்றேன்-நிச்சயம்-உண்மை துணிவு முதலிய சொற்கள் இதற்கு உருபுகளாய் விரிந்தே னுந் தொக்கேனும் வரும்.

இவ்வணி பொருட்டற்குறிப்பு ஏதுத்தற்குறிப்பு பயன் றற்குறிப்பு என மூவகைப்படும். இவற்றை முறையே வட நூலார் வஸ்தூத்ப்ரேக்ஷை ஹேதூத்ப்ரேக்ஷை பலோத்ப்ரே க்ஷை என்பர். இவற்றுள்,விஷயம் விரிந்துநிற்றலுந் தொக்கு வருதலுமாகிய இரண்டாலும் பொருட்டற்குறிப்பு இரண் டாம். ஒழிந்த இரண்டும் விஷயமுளதாதலும் இலதாதலு மாகிய இரண்டாலும் இவ்விரண்டாம்.

(1). விரிபுலப்பொருட்டற்குறிப்பு.

உ-ம். "நேமிப் பெடைத்திரளி னெஞ்சங் களிற்றோன்றுங்
காமத் தழலிற் கதித்தோங்கு - தூமத்தின்
கூட்ட மெனவே குறிக்கின்றேன் மேதினிமே
லூட்ட மறையிருளை நான்."

இதில், இரவின்கண் எங்கும் வியாபித்த இருளில் கரு மை கண்மறைத்தன் முதலிய தரும சம்பந்தத்தினலப்போது தத்தஞ்சேவலைப் பிரிவுற்றுப் பலவிடங்களிலுமிருக்கின்ற சக் கிரவாகப் பேடைகளின் உள்ளத்து எரிந்தெழுதற்கு மூளுகி ன்ற காமத்தீயிற்றோன்றும் புகைக்கூட்டமாகிய பொருளின் அபேதம் அத்தியவசயிக்கப்பட்டது. இருளாகிய விஷயம் விரிந்து நின்றது. புகைக்கூட்டம் விஷயி.

இவள் முகத்தைச் சந்திரனென்று நினைக்கின்றேன் என்பதும் அது.

(2). தொகுபுலப்பொருட்டற்குறிப்பு.

உ-ம். "காரிரு ளங்கங் கலைப்பூ சுதல்போலும்
பேருலகந் தன்னிற் பெரிது." எனவும்,

"மைம்மா ரியைவானம் பெய்வதுமா னத்தோன்று
மிம்மா நிலத்தி னிருள்." எனவும்

சொல்லப்பட்ட இவ்விரண்டிலும், இருளது வியாபித்த லில் விண்முதல் மண்காறு மெல்லாவற்றையுங் கரியன வாக்குதலாகிய தரும சம்பந்தத்தினாலே இருளை விண்முத லாகவுடைய பூசுதலினது அபேதமும், ஆகாயத்தைக் கருத் தாவாகவுடைய மைம்மழை பெய்தலினது அபேதமும் அத் தியவசயிக்கப்பட்டன. இவ்விரண்டிலும், இருளினது வியா பித்தலாகிய விஷயந் தொக்குவந்தது. பூசுதலும் பெய்த லும் விஷயிகள்.

## (3). உளபுலவேதுத்தற்குறிப்பு.

உ-ம். "ஏந்திழைநின் றாளவணி யின்மேன் மிதித்தலினாற்
சேந்தனவென் றுள்ளுமென் னெஞ்சு."

இதில், பாதங்களினது இயற்கைச் சிவப்பிற்கு ஏதுவா காத பூமியின் மிதித்தலில் ஏதுத்தன்மை அத்தியவசயிக்கப் பட்டது. மிதித்தலாகிய விஷயம் உளதாகுகையால் உளபுல மாம். ஏதுத்தன்மை விஷயி.

## (4). இல்புலவேதுத்தற்குறிப்பு.

உ-ம். "முகவொளியைப் பாவாய் பெறற்குமுண்ட கத்தோ
டிகலுமதி யையப மில்லை."

இதில், இயல்பினுண்டாகிய தாமரை மதிகளின் பகைக் கேதுவாகாத பாவைமுகத் தொளி விருப்பத்தில் ஏதுத்தன் மை அத்தியவசயிக்கப்பட்டது. அவ்விருப்பம் மதிக்கின்மை யால் இல்புலம். விருப்பம் விஷயம். ஏதுத்தன்மை விஷயி.

## (5). உளபுலப்பயன்றற்குறிப்பு.

உ-ம். "துயிற்றிரளை யோட்டுமொழிக் கோமளமின் னேநின்
வயிற்றமடிப் பாகியநல் வண்பொற் - கயிற்றினான்

மொட்டுண்ட பாரமுலையைச் சுமந்திடற்குக்
கட்டுண்ட தோநின் னிடை."

இதில், இடையானது கொங்கைகளைத் தன்னியல்பிற் சுமத்தலான் மடிப்பாகிய பொற்கயிற்றின் கட்டுக்குப் பலனுகாதிருக்க அச் சுமத்தலில் பலத்தன்மை அத்தியவசயிக்கப் பட்டது. சுமத்தலாகிய விஷயம் உளதாகுகையால் உளபுலம். பலத்தன்மை விஷயி.

## (6). இல்புலப்பயன்றற்குறிப்பு.

உ-ம். "ஒண்டொடிகே ளுன்பதசா யுச்சியத்தை யுற்றிடற்கே
முண்டகமென் போது முதுசிலச்திற் - றண்டுறைநீர்
நின்றொரு தாளி னெடிது தவம்புரியு
மென்றறைதற் கைய மிலை."

இதில், கமலத்தினது நீரிலுறைதலாகிய தவஞ்செய்வதற்குப் பலனுகாத பதசாயுச்சிய மடைதலில் பலத்தன்மை அத்தியவசயிக்கப்பட்டது. பதசாயுச்சிய மடைதலாகிய விஷயங் கமலத்திற்கு மெய்ம்மையாக இன்மையால் இல்புலமாம். பலத்தன்மை விஷயி.

## 13. உயர்வுநவிற்சியணி.

அஃதாவது, ஒருபொருளானது தன்சொல்லாற் சொல்லப்படாமல் கேட்போரை மகிழ்விப்பதும் இஃது அஃதன்று எனறு தெரிந்துந் தன்னிச்சையா லாமென்று கொள்ளப் படுவதுமாகிய ஆரோப நிச்சயத்திற்கு விஷயமாகுதலாம். இதனை வடநூலார் அதிசயோக்த்யலங்கார மென்பர். இவ்வணி எழுவகைப்படும்.

### (1). உருவகவுயர்வுநவிற்சி.

அஃதாவது, உபமேயத்தை அதன் சொல்லாற்சொல்லாமல், உபமானச் சொல்லினுல் இலக்கணையாகச் சொல்லுதல்.

உ-ம். "புயலே சுமந்து பிறையே யணிந்து பொருவிலுடன்
கயலே மணந்த கமல மலர்ந்தொரு கற்பகத்தி [செந்நெல்
னயலே பசும்பொற் கொடிநின்ற தால்வெள்ளை யன்னஞ்
வயலேய் தடம்பொய்கை சூழ்தஞ்சைவாணன் மலயத்திலே.

இதில், புயல்முதலிய உபமானச்சொற்களாற் கூந்தல்முதலிய உபமேயங்கள் இலக்கணையாகச் சொல்லப்பட்டன.

## (2). ஒழிப்புயர்வுநவிற்சி.

அஃதாவது, முன்சொன்ன உயர்வுநவிற்சி ஒழிப்போடு கூடி வருதல்.

உ-ம். "பைந்தொடிநின் சொல்லி லமுதுளதாற் பாமரர்க
ளிந்துவிடத் துண்டென்ப ரே."

இதில், அமிர்தமென்னப்பட்ட உபமானத்தினால் சொல்லில் இருக்கின்ற மாதுரியமாகிய உபமேயஞ் சொல்லப்பட்டுச் சந்திரனிடத்து இல்லையென்பதால் ஒழிப்பை யுட்கொண் டிருக்கின்றது,

## (3). பிரிநிலையுயர்வுநவிற்சி.

அஃதாவது, உலகத்திற் பிரசித்தயாகிய தீரம் உருவம் செல்வம் முதலியவைகட்கு இனமாகிய தீராதிகளைப் பிரித்துச் சொல்லுதல்.

உ-ம். "பாந்தண் முடியிற் பரிக்குங் குவலயத்தில்
வேந்தனது தீரமொன்றும் வேறு." எனவும்,
"போதார் மலர்க்கூந்தற் பூவை யிவள்படைப்புச்
சாதா ரணமான தன்று." எனவும்

வரும் இவைகளில், தீரத்திலும் படைப்பிலு மிருக்கின்ற அபேதத்தில் பேதம் ஆரோபிக்கப்பட்டது.

## (4). தொடர்புயர்வுநவிற்சி.

அஃதாவது, சம்பந்தமில்லாதிருப்பச் சம்பந்தத்தைக் கற்பித்தல்.

உ-ம். "அகழுமி ஞ்சியு மண்டத்தி னடிமுடி காறம்
புகுது மென்றதம் மாற்றலான் முரணுபு புகுங்கா
லிகலும் வெஞ்சினச் சேடனே டிராகுவென் றுரைக்கு
நிகரில் பாம்புக ணெறியிடைக் காண்டலு நின்ற."

இதில், சம்பந்தமில்லாமையில் சம்பந்தம் ஆரோபிக்கப் பட்டது.

அன்றியும், சம்பந்தமிருக்கச் சம்பந்தமில்லாமையைக் கற்பித்தலுமது.

உ-ம். "அற்பகத்தின் மன்னவனே நீயருள்செ யாநிற்பக்
சற்பகத்தை யாம்விரும்போங் காண்."

இதில், கற்பகத்தை விரும்புதலின் சம்பந்த மிருக்க அதில் அதனது இல்லாமை யாரோபிக்கப்பட்டது.

(5). முறையிலுயர்வு நவிற்சி.

அஃதாவது, காரணமுங் காரியமும் ஒருகாலத்தில் நிகழ்வனவாகச் சொல்லுதல்.

உ-ம். "மன்னநின் கணையு மொன்னலர் கூட்டமு
மேககா லத்தினு ணிகந்தோ டினவெனி
லுன்புகழ்த் திறத்தினை யுணர்ந்து
மன்பதை யுலகுள்யார் பாடவல் லாரே."

இதில், அம்பினது தாக்குகையாகிய காரணத்திற்கும் அரசர்களினோட்டமாகிய காரியத்திற்கும் முன்பின்றோன்று கைத் தன்மையில் ஒருகாலததிலுண்டாகுகை கற்பிக்கப் பட்டது.

"விரிந்த மதிநிலவின் மேம்பாடும் வேட்கை
புரிந்த சிலைமதவேள் போரும் - பிரிந்தோர்
நிறைதளர்வு மொக்க நிகழ்ந்தனவா லாவிப்
பொறைதளரும் புன்மாலைப் போழ்து." இதுவும் அது.

### (6). விரைவுயர்வுநவிற்சி.

அஃதாவது, காரணவுணர்ச்சி மாத்திரத்திலே காரியமுண்டாதல்.

உ-ம். "அருளாக்கு நல்லறமுண் டாக்குமின்புண் டாக்குந்
தெருளாக்கு மென்றுளங்கொள் செம்மல் - பொருளாக்கற்
கேழையான் செல்வ னெனப்புகலா நிற்பவிர
லாழிவளை யாயிற் றவட்கு."

இதில், பிரிவுணர்ச்சியினாலேதானே நாயகியின் வாட்டமாகிய காரியம் மோதிரம் வளையாயிற்றென்பதினால் விளங்கிற்று. காரியம்பிறத்தல் விஷயம்.

### (7). மிகைவுயர்வுநவிற்சி.

அஃதாவது, காரியத்தை முன்னுங் காரணத்தைப் பின்னும் நிகழ்வனவாகச் சொல்லுதல்.

உ-ம். "வணங்கியிறை யின்சொல் வழங்குமுனம் பேதைக்
குணங்கூட னீங்கிற் றுளத்து."

இதில், காரணகாரியங்களின் முன்பின் நிகழ்தலாகிய முறையில் முறைபிறழ்வு ஆரோபிக்கப்பட்டது. இறுதிக்கண் நின்ற மூன்றலங்காரங்களுங் காரியவிரைவைச் சொல்வனவாம்.

## 14 ஒப்புமைக்கூட்டம்.

அஃதாவது, வர்ணியங்களாகிய பல பொருள்களையாயினும் அவர்ணியங்களாகிய பல பொருள்களையாயினும் பொதுவாகிய ஒருதருமத்தில் முடித்தலாம். இதனை வடநூலார் துல்யயோகிதாலங்காரமென்பர்.

### (1). புனைவுளியோப்புமைக்கூட்டம்.

உ-ம். "மாமதிதோன் றக்கணவர்த் தீர்ந்தமட வார்முகமுந்
தாமரைப்பூ வுஞ்சோர்ந் தன."

இதில், சந்திரோதய வர்ணனையிற் சேர்ந்த தாமரைக்கும், பிரிவுற்ற மாதர் முகங்களுக்கும், வாடுதலாகிய ஒரு தருமத்தில் முடிவுசெய்தது காண்க.

(2). புனைவிலி யொப்புமைக்கூட்டம்.

உ-ம். "தீதில் கழைச்சாறுந் தெள்ளமுத முங்கசக்குக்
கோதையிவள் சொல்லுணர்ந்தார்க் கு."

இதில், வசனமாதுரிய வர்ணனையில் அவர்ணியங்களாகிய கழைச்சாறு முதலியவைகளுக்குக் கசப்பாகிய ஒரு குணத்திலே முடிவுசெய்தது காண்க.

அன்றியும், உறவினரிடத்தும் பகையினரிடத்துஞ் சமனாக நடந்ததாகச் சொல்லுதலும் ஓர் ஒப்புமைக் கூட்டம்.

உ-ம். "வீரமிகு மன்னனிவன் விட்டார்க்கு நட்டார்க்குந்
தாரணியி னுக்கினனந் தல்."

இதில், நட்டவர்க்கு நந்தல் ஆக்கம். விட்டவர்க்கு நந்தல் கேடு.

உ-ம். "விரும்பி வளர்ப்போர்க்கும் வெட்டுதல்செய் வோர்க்குந்
தரும்வேம்பு வெங்கசப்பைத் தான்."

இன்னும், உயர்வாகிய பொருள்களோடு கூட்டிச்சொல்வதும் அது.

உ-ம். "ஈகுந ்கள் கற்பகமு மின்கதிர்ச்சிந் தாமணியு
மேகமுமன் னுநீயு மே." என வரும்.

15. விளக்கணி.

அஃதாவது, வர்ணியங்களும் அவர்ணியங்களும் ஒரு தருமத்தில் முடிதலாம். இதனை வடநூலார் தீபகாலங்கார மென்பர்.

உ-ம், "ஆதபத்தாற் சூரி யனும்பிரதா பத்தினன்
மேதகுவேந் தும்விளங்கு மே."

இதில், சூரியனும் வேந்தனும் விளங்குதலாகிய ஒரு தருமத்தில் முடிந்தன.

## 16. பின்வரு விளக்கணி.

அஃதாவது, முன் வாக்கியத்தில் வந்த விளக்கச்சொல்லேனும் பொருளேனுஞ் சொல்லும் பொருளுமேனும் பின் வாக்கியங்களிலும் வருதலாம். இதனை வடநூலார் ஆவ்ருத்தி தீபகாலங்காரமென்பர். இவ்வணி மூவகைப்படும்.

### (1). சொற் பின்வரு விளக்கு.

உ-ம். "மாரனமுங் கம்பெய்யு மான்கணமுங் கம்பெய்யும்
வீரனின்று வாரா விடின்."

### (2). பொருட் பின்வரு விளக்கு.

உ-ம். "அவிழ்ந்தன தோன்றி யலர்ந்தன காயா
நெகிழ்ந்தன நேர்முகை முல்லை - மகிழ்ந்திதழ்
விண்டன கொன்றை விரிந்த கருவிளை
கொண்டனசெங் காந்தள் குலை."

### (3). சொற்பொருட் பின்வரு விளக்கு.

உ-ம். "மகிழ்ந்த நெடுஞ்சா தகமகிழ்ந்த தோகை
புகழ்ந்திடுகார் வானெழுந்த போது."

## 17. தொடர்மூழு துவமையணி.

அஃதாவது, இரண்டு வாக்கியங்களிலுஞ் சாதாரண தர்மத்தைச் சொல்லுதலாம். இதனை வடநூலார் ப்ரதிவஸ்தூபமாலங்காரமென்பர். இவ்வணி இருவகைப்படும்.

(1). நிகர் தொடர்முழுதுவமை.

உ-ம். "தாபத்தி னல்விளங்கும் வெய்யோன் றராபதிநீள்
சாபத்தி னல்விளங்குந் தான்."

(2). முரண் டொடர்முழுவமை.

உ-ம். "கற்றோ,னருமைகற்றோ னேயறியும் வந்திமகப்
பெற்றோ ளருமையறி யாள்."

இதில், கற்றோனே அறியுமென்றதற்கு, மலடி அறி யாள் என்பதாற் றோன்றும் பெற்றவளே அறிவாளென்பது உபமானமாம்.

பொருட் பின்வருவிளக்கிற்கும் இதற்கும் வேற்றுமை: அதில், வர்ணியங்களாவது அவர்ணியங்களாவது சொல்லப் படும்; இதில், அவ்விரண்டுஞ் சொல்லப்படும்.

## 18. எடுத்துக்காட்டுவமையணி.

அஃதாவது, பிம்பப் பிரதிபிம்ப பாவத்தைக் காட்டுத லாம். பிம்பப்பிரதிபிம்ப பாவமாவது சுபாவத்திலே பின்னங் களாயிருந்தாலும் ஒன்றற்கொன் றுண்டாகிய ஒப்புமையினல் அபின்னங்களாகிய உபமானோபமேயங்க ளுடைய தருமங் களை இரண்டு வாக்கியங்களிலே தனித்தனி சொல்லுதலாம். இதனை வடநூலார் த்ருஷ்டாந்தாலங்காரமென்பர். இவ்வணி இருவகைப்படும்.

(1). நிகரெடுத்துக்காட்டுவமை.

உ-ம். "அண்ணனீ யேகீர்த்தி மானம் புலிதானே
வண்ணவுல கிற்காந்தி மான்."

இதில், கீர்த்திக்குங் காந்திக்கும் பிம்பப் பிரதிபிம்ப பாவஞ் சொல்லப்பட்டது.

"அகர முதல வெழுத்தெல்லா மாதி
பகவன் முதற்றே யுலகு." இதுவும் அது.

(2). முரணெடுத்துக்காட்டுவமை.

உ-ம். "மன்னவநின் னெஞ்சிற் சினந்தோன்ற மாநிலத்தி
லொன்னலர்தங் கூட்ட மொழிந்ததாற் - பன்னி
னெதனளவும் வெய்யோ னுதயமெற்பெய் தானே
வதனளவு மேவுமே யல்."

இதில், தோன்ற ஒழிந்தது என்றதற்கு, எய்தானே மேவும் என்னும் பகைப்பொருளால் தோன்றுகின்ற அடைந்தால் இருள் நீங்கும் என்பது ஒப்பாதல் காண்க.

## 19. காட்சியணி.

இதனை வடநூலார் நிதர்சநாலங்கார மென்பர். இவ்வணி மூன்றுவகைப்படும்.

(1). வாக்கியப்பொருட்காட்சி.

அஃதாவது, இரண்டு வாக்கியார்த்தங்களுக்கு ஐக்கியத்தை ஆரோபித்தல்.

உ-ம். "முறைசெழு வள்ளற்கு முனிவின்மை திங்கட்
கறைகளங்க மில்லாமை யாம்."

இதில், கோபமில்லாமையில் களங்கமில்லாமை யாரோபிக்கப்பட்டது.

(2). பதப்பொருட்காட்சி.

அஃதாவது, உபமானோபமேயங்களுள் ஒன்றில் ஒன்றனது தருமத்தை யாரோபித்தல்.

உ-ம். "குவளை மலரழகைக் கொண்டனசீ ரார்ந்து
கவினுமிளந் தோகாய்நின் கண்." எனவும்,

"மருத்தருகோ தாய்நின் வதனத் தொளியைத்
தரித்துளதா லொண்சீர்ச் சசி." எனவும்

வரும் இவற்றுள் முறையே உபமேயத்தில் உபமான தருமமும், உபமானத்தில் உபமேயதருமமும் ஆரோபிக்கப் பட்டன.

(3). பொருட்காட்சி.

அஃதாவது, தன் செய்கையினால் நற்பொருளையாயினுந் தீப்பொருளை யாயினுந் தெரிவித்தல்.

உ-ம். "ஆதவனற் செல்வந் தனக்குப் பலனடுத்தோர்க்
கீத லெனல்விளக்கா நின்றெழீஇத் - தாதொடுதேன்
மல்கு கமல மலர்க்கொருதன் காந்திவள
நல்குகின்றான் பேருலகி னன்கு." இது நற்பொருட்காட்சி.

"அற்பனுயர் வாமிடத்தை யண்மினுங்கீழ் வீழ்வதலா
னிற்பதில்லை யென்னு நெறிவிளக்கி - வெற்பின்
சிகரமுறு நீர்த்திவலை தென்றலிற்றாக் குண்டு
மிக நடுங்கிக் கீழே விழும்." இது தீப்பொருட்காட்சி.

"வெண்மதிதோன் றத்திமிரம் வேந்தன் பகையழித
லுண்மையெனல் காட்டிற் றொழிந்து." இதுவும் அது.

வேந்தன் சந்திரனுக்கும் அரசனுக்குஞ் சிலேடை.

## 20. வேற்றுமையணி.

அஃதாவது, உபமானோபமேயங்களில் யாதேனும் ஒன்றை விசேடமுடைத்தாகச் சொல்லுதலாம். இதனை வடநூலார் வ்யதிரேகாலங்கார மென்பர்.

உ-ம். "மலிதேரான் கச்சியு மாகடலுந் தம்மு
ளொலியும் பெருமையு மொக்கு - மலிதேரான்
கச்சி படுவ கடல்படா கச்சி
கடல்படுவ வெல்லாம் படும்."

இதில், உபமேயமாகிய கச்சிக்கு அதிகஞ் சொல்லப் பட்டது.

உ-ம். "நறைமலர்த்தார்க் கூந்தலுடை நாரி முகமு
நிறைமதியு நேரொக்கு மேனு - முறைதெரியின்
மாவிருளை யாக்கு மடந்தைமுகம் பூதலத்தின்
மாவிருளைப் போக்கு மதி."

இதில், உபமானமாகிய மதிக்கு மாலிருள்போக்குதல் அதிகமாகச் சொல்லப்பட்டது. மால் - மயக்கமும் பெருமையும்.

## 21. உடனிகழ்ச்சியணி.

அஃதாவது, கற்றோரை மகிழ்விக்கும் உடனிகழ்தலைச் சொல்லுதலாம். இதனைவடநூலார் ஸஹோக்த்யலங்காரமென்பர். தண்டியாசிரியர் புணர்நிலை யென்பர்.

உ-ம். "இகந்த பகைவ ரினத்தொடுவேல் வேந்தே
திகந்த மடைந்ததுநின் சீர்." எனவரும்.

இதற்கு ஒடு ஓடு என்னும் மூன்றும்வேற்றுமை யுருபு வரும்.

## 22. இன்மைநவிற்சியணி.

அஃதாவது, யாதேனும் ஒன்றன் இல்லாமையால் வர்ணியத்தை உயர்வு அடைவதாகவேனுந் தாழ்வு அடைவதாகவேனுஞ் சொல்லுதலாம். இதனை வடநூலார் விநோக்த்யலங்காரமென்பர்.

உ-ம். "மறங்கொள் கொடியோரி லாமையினெம் மன்னு
சிறந்துளதுன் பேரவைசீர் சேர்ந்து."

இதில், தீயரில்லாமையால் சபைக்கு உயர்வு சொல்லப் பட்டது.

உ-ம். "புகழ்ச்சூரியன் கற்ரூே னெனினும் புவியி
விகழ்க்சூரியன் சாந்தமில னேல்."

இதில், சாந்தமில்லாமையால் கற்ரூேனுக்குத் தாழ்வு சொல்லப்பட்டது.

## 23. சுருங்கச்சொல்லலணி.

அஃதாவது, அடைமொழி யொப்புமையாற்றலால் அல்பொருட்செய்தி தோன்றப் புகழ்பொருட் செய்தியைச் சொல்லுதலாம். இதனை வடநூலார் ஸமாஸோக்த்யலங்கார மென்பர்.

உ-ம். "இந்தக் கன்னி மதிமுழுநோக் கெய்திச் செவ்வாய் வலியடை[ந்து
சந்தச் சிங்கர் தனையடுத்த தக்க வரவின் வலிசார்ந்து
முந்தைக் கொடிமீ னத்தலைவன் முனிவ ராகும் பகைவெல்லக்
கந்தப் பகழி பலவேழக் கருப்புச் சிலையிற் றொடுத்தனனால்."

இதில், வர்ணிக்கப்படுகின்ற மன்மத விர்த்தாந்தத்தில் அவர்ணியமாகிய கோசாரபலம் பார்த்துப் போர்க்குச் செல்லும் அரசர் விர்த்தாந்தந் தோன்றிற்று. இது சிலேஷை விசேஷணம்.

உ-ம். "கொந்தார் குழல்சரியக் கோல முகம்வியர்ப்பச்
சந்தார் திதலைத் தனமசையப் - பந்தேநீ
சிற்றிடையா ளார்வமொடு தீண்டிவிளை யாடுதற்கு
நற்றவமென் செய்தாய் நவில்."

இதில், பந்தின் சமாசாரம் வர்ணிக்கப்பட்டுக்கொண்டிருக்க விபரீதப் புணர்ச்சியில் இச்சையுடைய நாயகன் சமாசாரந்தோன்றிற்று. இது பொது அடை.

## 24. கருத்துடையடையணி.

அஃதாவது, அபிப்பிராயத்தோடு கூடிய விசேஷணத்தைச் சொல்லுதலாம். இதனை வடநூலார் பரிகராலங்கார மென்பர்.

உ-ம். "திங்கண் முடிசேர் சிவனுமது தாபத்தை
யிங்ககற்றி யாள்க வினிது."

இதில், திங்கண்முடிசேர் என்னும் அடைமொழி தாபத்தை நீக்கவல்லன் என்னுங் கருத்தை உட்கொண்டிருக்கின்றது.

உ-ம். "நெடுங்கோலச் சென்னிமிசை நீர்கொளர னோங்
கொடுங்காமத் தீயையவிக் கும்." இதுவும் அது.

"வாளான் மகவரிந் தூட்டவல் லேனல்லன் மாதுசொன்ன
சூளா லிளமை துறக்கவல் லேனல்லன் றொண்டுசெய்து
நாளாறிற் கண்ணிடந் தப்பவல் லேனல்ல னினிச்சென்
றாளாவ தெப்படி யோதிருக் காளத்தி யப்பனுக்கே."

இதில், விசேஷணங்கள் வாக்கியரூபமா யிருக்கின்றன. சிறுத்தொண்டரு மல்லேன், திருநீலகண்டரு மல்லேன், கண்ணப்பரு மல்லேன் என்பதாம்.

## 25. கருத்துடை யடைகொளியணி.

அஃதாவது, அபிப்பிராயத்தோடு கூடிய விசேஷியத்தைச் சொல்லுதலாம். இதனை வடநூலார் பரிகராங்குராலங்கார மென்பர்.

உ-ம், "மூக்கணனே யன்புடையார் மும்மலநீங் கப்பார்க்கத்
தக்கவனென் றென்னெஞ்சே சார்."

இதில், முக்கணனென்னும் விசேஷியம் ஆணவமுதலிய மும்மலங்களையும் நீக்கவல்லனென்னுங் கருத்தை உட்கொண்டிருக்கின்றது.

"சீர்த்தநின் புகழ்கூ றற்குச் சேடனு மெழுதற் கந்தக்
கார்த்தவீ ரியனும் வேந்துங் கரிசறு நலத்தி னோடு

பார்த்திடற் கமரர் கோனும் வல்லரல் லதுபாண் வண்ட
ரார்த்திடு தாரோ யேனோர்க் காவது தானென் றுண்டோ."

இதில், விசேஷியங்கள் வாக்கியரூபமாக வந்தன.

## 26. பல்பொருட்சொற்றொடரணி.

அஃதாவது, பல பொருள்களைத் தருதற்குரிய சொற்களைப் புணர்த்துக் கூறுதலாம். இதனை வடநூலார் சிலேஷாலங்கார மென்பர். இவ்வணி மூன்று வகைப்படும்.

### (1). புணைவுளிப் பல்பொருட் சொற்றொடர்.

உ-ம். "மணிமுடிமேற் கொண்டுலகை மாட்சிபெறத் தாங்கி
யணிநற் பொறிசிறஞ்சேர்ந் தாரும் - பணியிறைமை
மிக்கபுகழ் நீளரியே மேவுகூ வத்திறைக்குத்
தக்கவில்லிற் சேர்காரி தான்."

இது திருமாலுக்கும் அனந்தனுக்குஞ் சிலேடை. அவ்விரண்டும் வர்ணியங்களாம்.

### (2). புணைவிலிப் பல்பொருட் சொற்றொடர்.

உ-ம், "தெருட்டுங் கலைபலவுஞ் சேர்ந்த மதியை
மருட்டு முகத்தினளம் மான்.

இது சந்திரனுக்கும் புத்திக்குஞ் சிலேடை. அவ்விரண்டும் அவர்ணியம்.

### (3). இருமைப் பல்பொருட் சொற்றொடர்.

உ-ம். "ஏர்க்கதிர் வாள்கொடே யீர்வர் வீக்கிமெய்
வேர்க்கவங் கெடுத்துராய் வீழ்த்தி யெற்றுவர்
சூர்க்கரும் பகட்டினாற் றுவைப்பித் தார்ப்பராற்
போர்க்களம் புகுந்துபோர் புரிந்த மள்ளரே."

இதில், நெற்போர் படுத்தல் வர்ணியம். அமர்செய்தல் அவர்ணியம்.

## 27. புனைவிலி புகழ்ச்சியணி.

அஃதாவது, அவர்ணியத்தை வர்ணிக்க அதனது சம்பந்தத்தால் வர்ணியந் தோன்றுதலாம். இதனை வடநூலார் அப்ரஸ்துத ப்ரசம்ஸாலங்கார மென்பர். இவ்வணி ஐந்துவகைப்படும்.

### (1). ஒப்புமைப் புனைவிலி புகழ்ச்சி.

அஃதாவது, அவர்ணியத்தின் ஒப்புமையின் சம்பந்தத்தினால் வர்ணியந் தோன்றுதல்.

உ-ம். "மேதகுசீர்க் காரையன்றி வேறொன் றையுமிரவாச்
சாதகமே புள்ளிற் றலை."

இதில், அவர்ணியமாகிய சாதகப்புள் வர்ணனையில் அதற்கு ஒப்பாகிய ஒரு மன்னனைச் சேர்ந்து பிறரை யாசியாத மானியின் செய்தியாகிய வர்ணியந் தோன்றிற்று.

### (2). பொதுப் புனைவிலி புகழ்ச்சி.

அஃதாவது, அவர்ணியமாகிய பொதுப் பொருளால் வர்ணியமாகிய சிறப்புப்பொருள் தோன்றுதல்.

உ-ம். "மைந்தகேள் கல்வி வளமுணரா மாந்தரெலா
மந்தகரே யாவ ரவர்வடிவிற் - சந்தந்
தவழ் திரைக ளார்த்தெழூஉந் தண்கடல்சூழ் வையத்
தவிழ்முருக்கம் பூவினிற மாம்."

இதில், தந்தை விளையாட்டுச் சிந்தையையுடைய மைந்தற்கு அறிவு கொளுத்தலாகிய சிறப்புப்பொருள் தோன்றப் பொதுப்பொருள் சொல்லப்பட்டது.

### (3). சிறப்புப் புனைவிலி புகழ்ச்சி.

அஃதாவது, அவர்ணியமாகிய சிறப்புப்பொருளால் வர்ணியமாகிய பொதுப்பொருள் தோன்றுதல்.

உ-ம். "மன்னு மிருகமதைத் தாங்கு மதிகளங்க
னென்னும் பெயர்கொண் டிழிவுற்றான் - பன்மிருகக்
கூட்டங்கொல் சியமிடல் கொண்மிருக ராசனெனப்
பீட்டினொடு கொண்டதொரு பேர்."

இதில், கொடியவன் புகழுடைவான், மெல்லியன் புகழுடையானென்கிற பொதுப்பொருள் தோன்றச் சிறப்புப் பொருள் சொல்லப்பட்டது.

(4). காரணப் புனைவிலி புகழ்ச்சி.

அஃதாவது, அவர்ணியமாகிய காரணத்தால் வர்ணியமாகிய காரியந் தோன்றுதல்.

உ-ம். "ஒழுகொளி விரிந்த கதிர்மணி வண்ண
னுந்தியந் தாமரை வந்தோன்
முழுமதிக் கலையு ணிறைந்தபே ரழகை
மொண்டுகொண் டரிபரந் தகன்ற
மழைமதர் நெடுங்கட் டமயந்தி வதனம்
வகுத்தனன்."

இதில், காரணமாகச் சொல்லப்பட்ட சந்திர சாரத்தினால் உயர்வுடைய முகத்தழகாகிய காரியந் தோன்றிற்று.

(5). காரியப் புனைவிலி புகழ்ச்சி.

அஃதாவது, அவர்ணியமாகிய காரியத்தால் வர்ணியமாகிய காரணந் தோன்றுதல்.

உ-ம். "மருக்கமழ்பூங் கோதை மடநடையைக் காணிற்
செருக்கடையா தன்னத் திரள்."

இதில், செருக்கடையாமையாகிய காரியத்தினாலே மெல்லிய நடையழகாகிய காரணந் தோன்றிற்று.

## 28. புனைவுளி விளைவணி.

அஃதாவது, சொல்லப்பட்ட ஒரு வர்ணியத்தினாற் சம்மதமாகிய மற்றொரு வர்ணியந் தோன்றுதலாம். இதனை வடநூலார் ப்ரஸ்துதாங்குராலங்கார மென்பர்.

உ-ம். "அம்புயநற் போதிருப்ப வஞ்சிறைவண் டேகொடுமுட்
பம்புகைதை யாலென் பயன்."

இதில், தடாகக் கரையில் தலைவனுடன் விளையாடுந் தலைவி சொல்லிய வர்ணியமாகிய வண்டின் சமாசாரத்தினால் மனோகரமாகிய அவளை விட்டு அச்சமுறுத்தும் பரத்தைபாற் செல்லுந் தலைவன் நிந்தையாகிய மற்றொரு வர்ணியந் தோன்றிற்று.

## 29. பிறிதினவிற்சியணி.

இதனை வடநூலார் பர்யாயோக்தாலங்காரமென்பர். இவ்வணி இரண்டுவகைப்படும்,

(1). கருதிய பொருளை அதற்குரிய விதத்தாற் கூறாது மற்றொரு விதத்தாற் கூறுதல்.

உ-ம். "இராகு மனைவிமுலைக் கில்பயனைச் செய்தோற்
பராவுகநீ நெஞ்சே பணிந்து."

இதில், வாசுதேவனை இராகுவை வென்றவன் என்னாது அப்பொருள் தோன்றப் பிறிதோராற்றாற் கூறினார்.

(2). கபடத்தினாலே தன்னாலிச்சிக்கப்பட்டதைச் சாதித்தல்.

உ-ம். "மின்னிகரா மாதே விரைச்சாந் துடன்புணர்ந்து
நின்னிகரா மாதவிக்க ணின்றருணீ - தன்னிகராஞ்
செந்தி வரமலருஞ் செங்காந்தட் போதுடனே
யிந்தி வரங்கொணர்வல் யான்."

இதில், தலைவியைத் தலைவனிடத்து விட்ட தோழி மலர்க்குப் போதலாகிய கபடத்தினால் அவ்விருவரும் எண்ணப்படி நடத்தலாகிய தன்னிஷ்டத்தைச் சாதித்தாள்.

## 30. வஞ்சப்புகழ்ச்சியணி.

இதனை வடநூலார் வ்யாஜஸ்துத்யலங்கார மென்பர். இவ்வணி மூன்று வகைப்படும்.

(1). பழிப்பினாற் புகழ்ச்சி தோன்றல். அப்புகழ்ச்சி பழிக்கப்பட்ட பொருட்கே யாகியும், பிறிதொன்றற்காகியும் வரும்.

உ-ம். "பேசுகொலை யாதிப் பெரும்பா தகர்தமையுந்
தேசமிகு வானுலகிற் சேர்க்கின்றாய் - வீசுதிரை
பின்னியெழு மோதை பெரிதுறுபா கீரதியே
நின்னறிவென் னென்பே னியான்."

இதில், விவேகமில்லை யென்னும் நிந்தையாற் பெரியோரைப்போல மகா பாதகரையுஞ் சுவர்க்க மடைவித்தலாகிய மகிமை தோன்றிற்று.

"அன்றிலங்கை யெரித்தகுரங் கெங்கெனவி ராவணன்பே
ரவையோர் கேட்ப
நன்றியிலிந் திரசித்து வென்பவனாற் பிணிப்புண்டு
நண்ணி னானிங்
கென்றிறைவ னடிபரவும் வானரர்க ளவனைநனி
யிகழ்ந்து மோத
வொன்றியவச் சத்தினிரிந் தொளித்தவிட மங்கதன்யா
னுணரே னென்றான்."

இதில், அனும நிந்தையால் மற்றை வானரர்களுக்குப் புகழ்ச்சி தோன்றிற்று.

(2). புகழ்ச்சியாற் பழிப்புத் தோன்றல். இதுவும் அப் பொருட்கே யாகியும் மற்றொரு பொருட்காகியும் வரும்.

உ-ம். "எற்காகத் தூதர சன்புடை யேயி ளிளங்கொடிநீ
யற்கா ரளகங் குலையமெய் வேர்வை யரும்பவந்தோ
பற்கா யமுநகத் தூறு நனியுறப் பட்டுநொந்தாய்
நிற்கா முறைசெய்கை மாறுமுண் டோவிந்த நீணிலத்தே."

இதில், நொந்தாய் என்னும் புகழ்ச்சியால் எனக்காக அன்று நீ புணர்தற்குப் போயினையென்னும் நிந்தை தோன்றிற்று.

"இரவறியா யாவரையும் பின்செல்லா நல்ல
தருநிழலுந் தண்ணீரும் புல்லு - மொருவர்
படைத்தனவுங் கொள்ளாவிப் புள்ளிமான் பார்மேற்
றுடைத்தனவே யன்றோ துயர்."

இதில், மான் புகழ்ச்சியால் அரசன் சேவையில் வருந்திய தன் நிந்தை தோன்றிற்று.

(3). புகழ்ச்சியாற் புகழ்ச்சி தோன்றல்.

உ-ம். "சீரார்ந் திலகுசிறைச் செந்தார்ப் பசுங்கிள்ளை
வாரார் முலையாய்நின் வாயிதழ்க்கு - நேராகுங்
கொவ்வைக் கனிநுகர்தற் குத்தவமென் செய்ததோ
செவ்வைத் திறத்திற் றெரிந்து."

இதில், கிள்ளைப் புகழ்ச்சியால் வாயிதழின் அழகு தோன்றிற்று.

## 31. வஞ்சப் பழிப்பணி.

அஃதாவது, நிந்தையினால் நிந்தை தோன்றுதலாம். இதனை வடநூலார் வ்யாஜநிந்தாலங்கார மென்பர்.

உ-ம். "நீயுந் தவறிலை நின்னைப் புறங்கடைப்
போதர விட்ட நுமருந் தவறிலர்

நிறையழி கொல்யானை நீர்க்குவிட் டாங்கு
பறையறைந் தல்லது செல்லற்க வென்னு
விறையே தவறுடை யான்."

இதில், இறைவன் நிந்தையால் தீச்செய்கை யுடைய மற்றொருவர் நிந்தை தோன்றிற்று.

## 32. எதிர்மறையணி.

அஃதாவது, ஒழிப்பணிக்கு வேறாகியும் கேட்போரை மகிழ்விப்பதாகியும் இருக்கின்ற மறுப்பைச் சொல்லுதலாம். [இது மறுக்கமட்டுஞ் செய்யும். ஒழிப்பணி ஆரோபித்தற் பொருட்டு மறுக்கும]. இதனை வடநூலார் ஆக்ஷேபாலங்கார மென்பர். இவ்வணி மூவகைப்படும்.

(1), தன்னாற் சொல்லப்பட்ட பொருளை ஒரு நிமித்தத் தினன் மறுத்தல்.

உ-ம். "ஒண்கதிர்த் திங்காணீ யுன்வடிவை யிங்கெமக்குக்
கண்களிகூ ரக்கடிது காட்டுவாய் - வண்கவின்கூர்
பூண்டாங்கு கொங்கையுடைப் பூவைமுக முண்டதனால்
வேண்டாம்போ வெற்றுக்கு வீண்."

இதில், தான் விரும்பிய சந்திர தரிசனத்தை முகமிருக் கையால் வீணென்று மறுத்தது காண்க.

(2). மறுப்புத் தான் தள்ளுண்டு மற்றொரு பொருளைத் தோன்றச்செய்தல்.

உ-ம், "நண்ணரு வுண்டளிசூழ் தாமமணி திண்டிறற்றோ
ளண்ணலே யான்றூது யல்லேனென்காண் - வண்ணமிகு
வேயெனுந்தோ ளாண்மெய் விரகதா பம்வடவைத்
தீயெனவே தோன்றுஞ் செறிந்து."

இதில், அல்லேனென்னும் மறை தள்ளுண்டு கூட்டுதற் குத் தக்க வஞ்சச்சொல்லை நீக்கி உண்மை கூறுவோர் தன்

மையைக் காட்டிக்கொண்டு விரைந்துவந்து அவளைக் காப்பாற்றென்னும் மற்றொருபொருளைத் தோற்றிற்று.

(3). உடம்பாட்டுச் சொல்லான் மறுப்பைக் காட்டுதல்.

உ-ம் ‘விளைபொருண்மே லண்ணல் விருப்புளேயே லீண்டெங்
கிளையழுகை கேட்பதற்கு முன்னே - விளைதேன்
புடையூறு பூந்தார்ப் புனைகழலாய் போக்குக்
கிடையூறு வாராம லேகு.”

இதில், ஏகு என்னும் உடன்பாட்டுச் சொல்லாற் போகேல் என்னும் மறுப்பு சுற்றத்தழுகையாற் குறிக்கப்பட்ட தலைவியிறக்கு மென்பதைக்கொண்டு காட்டப்பட்டது.

## 33. முரண்விளைந்தழிவணி.

அஃதாவது, ஓரிடத்து உள்ளனவுங் காரியகாரணங்கள் ஆகாதனவுமாகிய இரண்டு தருமங்களுக்கு மேன்மேலுந் தோன்றி அழியும் பகைமையைச் சொல்லுதலாம். இதனை வடநூலார் விரோதாபாஸாலங்கார மென்பர்.

உ-ம். “சந்தமில வாயுறினுஞ் சந்த முடையனவே
கோந்தவிழ்தார்ப் பாவை குயம்.”

இதில், சந்தமில்லனவற்றைச் சந்தமுடையனவேயாமென்னும் பகைமை அழகுடையன என்னும் பொருளால் அழிந்தது.

## 34. பிறிதாராய்ச்சியணி,

இதனை வடநூலார் விபாவநாலங்கார மென்பர். இவ்வணி அறுவகைப்படும்.

(1). உலகறி காரணமில்லாதிருப்பக் காரியம் பிறத்தலைச் சொல்லுதல்.

இதுவே பொதுவிதியுமாம்.

உ-ம், "கடையாமே கூர்த்த கருநெடுங்கண் டேடிப்
படையாமே யேய்ந்ததனம் பாவாய் - கடைஞெமியக்
கோட்டாமே கோடும் புருவங் குலிகச்சே
ருட்டாமே சேந்த வடி."

இதில், கடைதல் முதலிய பிரசித்தகாரண மில்லாமல் கூர்மையாதல் முதலிய காரியஞ் சொல்லப்பட்டன. இவற்றி ற்கு இயல்பென்னும் பிறிதோர்காரணம் ஆராய்ந்து கொள் ளப்பட்டது.

(2). காரணத்தினது தருமமாவது சம்பந்தமாவது குறைவாக இருப்பக் காரியம்பிறத்தலைச் சொல்லுதல்.

உ-ம், "திண்மையுங் கூர்மையு மில்லாக் கணைகளைச் சிந்துபுவன்
கண்மையின் மூவுல கங்களும் வென்றவக் காமனிக
லுண்மை யுணர்ந்து மொருநீ மறந்திடி னொண்டொடிதன்
பெண்மையென் பாடு படும்புக லாயெம் பெருந்தகையே,"

இதில், வெல்லுதற்கு ஏதுவாகிய அம்பிலே திண்மை யுங் கூர்மையுங் குறைவாம்.

(3). காரியம் பிறத்தற்குத் தடையுளதாகவும் அது பிறத்தலைச் சொல்லுதல்.

உ-ம். "அடுத்த நின்பிர தாப வருக்கனீ
ருடுத்த பார்மிசை மன்னவ வொண்குடை
விடுத்த வேந்தரை விட்டுவிடாதுமே
லெடுத்த வேந்த ரினத்தைக் கனற்றுமே."

இதில், பிரதிபந்தகமான குடை இருப்பவுஞ் சுடுதலா கிய காரியம் பிறந்தது.

(4). காரணமல்லாத மற்றொன்றாற் காரியம் பிறத்த லைச் சொல்லுதல்.

உ-ம். "வழுவாத மானிவள்பால் வண்சங்கி னின்று
மெழுமோநல் யாழி னிசை."

(5). பகையாகிய காரணத்தினின்றுங் காரியம் பிறத்தலைச் சொல்லுதல்.

உ-ம். "சீர்தரு சோமன் பொழிசி தளக்கதிர்கள்
சோர்தரவெம் மாதைச் சுடும்."

(6). காரியத்தினின்றுங் காரணம் பிறத்தலைச் சொல்லுதல்.

உ-ம். "மற்பெறவள் ளாலுதித்த தேர்பெறுநின் வண்கையெனுங்
கற்பகத்திற் சீர்ப்பாற் கடல்."

இதில், சீர்ப்பாற்கடல் கீர்த்தியாகிய பாற்கடல்.

## 35. காரணவாராய்ச்சியணி,

அஃதாவது, குறைவில்லாத காரணமிருந்துங் காரியம் பிறவாமையைச் சொல்லுதலாம். இதனை வடநூலார் விசேஷோக்த்யலங்கார மென்பர்.

உ-ம். "இறைமதனுந் தீப மெரிவுறு நின்றுங்
குறைவிலது நேயமென்னே கூறு,"

இதில், விளக்காகிய காரணமிருந்துங் காரியம் பிறவாமை காண்க. நேயமென்பது தைலமும் அநுராகமுமாம்.

## 36. கூடாமையணி,

அஃதாவது, ஒருகாரியம் பிறத்தலை அருமையுடைத்தாகச் சொல்லுதலாம். இதனை வடநூலார் அஸம்பவாலங்கார மென்பர்,

உ-ம், "அடுக்கலையோர் கையினு லாயச் சிறுவ
னெடுக்குமென யாரறிவா ரிங்கு,"

இதில், இடைக்குலச் சிறுவனுக்கு மலையெடுத்தலாகிய காரியம் அரிதாகச் சொல்லப்பட்டது. கோவர்த்தனகிரியைக் குடையாக எடுத்த கண்ணனை நோக்கி இந்திரன் இவ்வாறு கூறினன்.

## 37. தொடர்பின்மையணி.

இதனை வடநூலார் அஸங்கத்யலங்காரமென்பர். இவ்வணி மூன்றுவகைப்படும.

(1). காரணம் ஓரிடத்திருப்பக் காரியம் மற்றோரிடத்துப் பிறத்தலைச் சொல்லுதல்.

உ-ம். "வேறொரு மாதர்மேல் வேந்த னகநுதியா
லூறதர விம்மா துயிர்வாடுங் - கூறி
னிருவரே மெய்வடிவி னேந்திழை நல்லா
ரொருவரே தம்மி லுயிர்."

இதில், ஊறுசெய்தலாகிய காரணம் ஓரிடத்திருப்ப வாடுதலாகிய காரியம் ஓரிடத்துப் பிறந்தது.

"தீயனெனும் பாம்பு செவியிலொரு வற்கௌவ
மாயுமே மற்றொருவன்." இதுவும் அது.

(2). ஓரிடத்திற் செய்தற்குரியதை மற்றோரிடத்திற் செய்தல்.

உ-ம். "கங்கணங்கண் ணிற்றிலகங் கையிற் றரித்தனர்சீர்
தங்கிறையொன் னார்மடவார் தாம்."

இதில், கங்கணமென்பது கடகமும் நீர்த்துளியுமாம். திலகமென்பது திலோதகமும் பொட்டுமாம்.

(3). ஒன்றைச் செயத்தொடங்கி அதற்குப் பகையாகிய மற்றொன்றைச் செய்தல்

உ-ம். கண்ணன் மயலகற்றக் காமருநக் கொண்டதனாற்
பண்ணுமயன் மாதர் பலர்க்கு."

## 38. தகுதியின்மையணி.

இதனை வடநூலார் விஷமாலங்கார மென்பர். இவ்வணி மூன்றுவகைப்படும்.

(1). பொருந்துதற்குத் தகுதியில்லாத பொருள்களுக்குப் பொருத்தத்தைச் சொல்லுதல்.

உ-ம். "பொன்போலுங் கள்ளிப் பொறிபறக்குங் கானவிலே
யென்பேதை செல்லற் கிசைந்தனளே - மின்போலு
மானவேன் முட்டைக்கு மாருய தெவ்வர்போங்
கானவேன் முட்டைக்குங் காடு."

இதில், பேதையது மெல்லிய உருவத்திற்கும் பாலைநில வெப்பத்திற்கும் பொருத்தஞ் சொல்லப்பட்டது.

(2). ஒரு காரணத்தில் பகைக்குணமுடைய காரியம் பிறத்தலைச் சொல்லுதல்,

உ-ம். "மருவெறுழ்நங் கோன்கரிய வாள்வெண் புகழைத்
தருமா லுலகந் தனில்."

(3). ஒரு காரியத்தைச் செயத்தொடங்கி,
"எலியுணவிற் றென்றுரகப் பெட்டிகறித் தாயிற்
றெலியரவிற் குத்தா னுண."

என இஷ்டத்தை அடையாது அநிஷ்டத்தை அடைதலும்,

"பாவை யலர்க்குடைநீ பற்றுதற்கு வாரிசத்தை
வாவியில்வைத் தன்னே வளர்க்கின்றாய் - மேவுமலி
யிவ்வுலகு செய்நன்றி யெண்ணாது நின்வதனச்
செவ்வியது வௌவல் செயும்."

என மலர்க்குடையைத் தான் பெறுதலும் அது தன் முகவொளியை அபகரித்தலுமாகிய இஷ்டத்தையும் அநிஷ் டத்தையும் அடைதலும்,

"இலகு மதிகளங்க மேந்திழையாய் நீத்தற்
குலவிலுன தானனமா யுற்றுந் - திலகமென்பேர்
சேர்களங்க மேபெற்றான் பேதையரைச் சேர்ந்தக்கால்
யார்களங்கி யாகா ரறை."

எனக் களங்கம் ஒழித்தலாகிய இஷ்டத்தை அடையா மையும் ஆகிய இம்மூன்றுவகையானும் வரும்.

## 39. தகுதியணி.

இதனை வடநூலார் ஸமாலங்கார மென்பர். இவ்வணி மூன்று வகைப்படும்.

(1). தகுதியாகிய இரண்டு பொருள்களுக்குச் சம்பந் தத்தைச் சொல்லுதல்.

உ-ம். "இந்தத் தரளவட மேந்திழைநின் கொங்கைகளிற்
சந்தமுறச் சேர்த றகும்."

(2.) காரியத்தை அதன் காரணத்தோ டொத்த செய் கை யுள்ளதாகச் சொல்லுதல்.

உ-ம். "கானந் தனிலுதித்தக் கானந் தனையழித்திட்
டேனஞ்செய் தீயி னுதித்தபுகை - தானு
மெழிலி யுருவாகி யீர்ம்புனலைப் பெய்தத்
தழலை யவித்த றகும்."

(3.) விரும்பத்தகாததை யடையாமல் விரும்பப்பட் டதையே யடைதல்.

உ-ம். "பொற்கொடிநீர் நின்று புரிதவத்தாற் கஞ்சமலா
சொற்கவினின் றாளுருவாய்த் தோன்றியே - நற்கதியைச்

சேர்வுற் றனவுலகிற் செய்யதவ நற்கதியைச்
சார்விக்கு மென்பதுமெய் தான்."

இதில், நற்கதி-புண்ணிய லோகமும் நல்ல நடையுமாம்.

"நந்தலுறு தீவினைசெய் யேலென்று நான்மறைதே
ரந்தணன்பல் கானன் சுறைந்துமவன் - மைந்தனணி
நந்தலுறு தீவினையை நாடோறுஞ் செய்துமொரு
தந்தை யுரைகடவான் றான்."

இதில், எதிர்மறையால் அநிஷ்டந் தோன்றினும் அக்கினிகாரிய மென்னும் பொருளால் இஷ்டம் அடைதலே யாம்.

"மாதர்சுவர்க் கத்துநசை வைச்சமர்செய் வேந்தடைந்தான்
மாதர்சுவர்க் கத்தினையே மாண்டு."

இதில், அநிஷ்டந் தோன்றினுஞ் சிலேஷையால் இஷ்டம் அடைதலேயாம்.

## 40. வியப்பணி.

அஃதாவது, ஒருபயனைக் கருதி அதற்குப் பகையாகிய முயற்சியைச் செய்தல். இதனை வடநூலார் விசித்ராலங்கார மென்பர்.

உ-ம். "ஓதுந் திறத்தி லுயர்ந்தோர்க டாழ்குவரெப்
போதுமுயர் வெய்தற் பொருட்டு." என வரும்.

## 41. பெருமையணி.

இதனை வடநூலார் அதிகாலங்காரமென்பர். இவ்வணி இருவகைப்படும்.

(1). பெரிய ஆதாரத்தினும் ஆதேயத்தைப் பெரிதாகச் சொல்லுதல்.

உ-ம். "உலக முழுதடங்கு மாவிசும்பி லுன்ற
னலகில் குணமடங்கா வாம்."

(2). பெரிய ஆதேயத்தினும் ஆதாரத்தைப் பெரிதாகச் சொல்லுதல்.

உ-ம். "மன்சீ ருலகெவ் வளவுபெரு மைத்தளவி
லுன்சீ ரடங்கி யுள."

## 42. சிறுமையணி.

அஃதாவது, அற்பமாகிய ஆதேயத்தினும் ஆதாரத்தை மிக அற்பமாகச் சொல்லுதல். இதனை வடநூலார் அல்பாலங்காரமென்பர்.

உ-ம். "விரலாழி கைவளையாய் விட்டதினி யார்த்து
வரலாழிக் கென்செயுமெம் மாது."

ஆதாரம் - இடம்.

## 43. ஒன்றற்கொன்றுதவியணி.

அஃதாவது, ஒன்றற்கொன்று உபகரித்தலைச்சொல்லுதலாம். இதனை வடநூலார் அந்யோந்யாலங்காரமென்பர்.

உ-ம். "திங்களிர வால்விளங்குஞ் செப்புகதிர்த் திங்களாற்
கங்குல் விளங்குமே காண்."

## 44. சிறப்புநிலையணி.

இதனை வடநூலார் விசேஷாலங்காரமென்பர். இவ்வணி மூன்றுவகைப்படும்.

(1). பிரசித்தமாகிய ஆதாரம் இல்லாதிருப்ப ஆதேயத்தின் இருப்பைச் சொல்லுதல்.

உ-ம். "தினகரனில் லாமலவன் செய்ய கதிர்க
ளினிதிலங்குந் தீபத் திருந்து."

(2). ஒருபொருளைப் பல இடங்களில் இருப்பதாகச்சொல்லுதல்.

உ-ம். "ஆயிழை நல்லா ளகம்புறமுன் பின்னெங்கு
மேயவெனக் குத்தோன்று மே."

(3). அற்பகாரியஞ் செயத்தொடங்கி அருமையாகிய மற்றொரு காரியமுஞ் செய்தல்.

உ-ம். "மாட்சிமினிற் காண்பேற்கு வள்ளலே கற்பகநற்
காட்சியுங்கிட் டிற்றெளிது காண்."

## 45. மற்றதற்காக்கலணி.

இதனை வடநூலார் வ்யாகாதாலங்காரமென்பர். இவ்வணி மூவகைப்படும்.

(1). ஒரு காரியத்தினது உலகறி காரணத்தை ஒருவன் அதற்குப் பகையாகிய காரியத்திற்குக் காரணமாக்குதல்.

உ-ம். "உலகைமகிழ் விக்கு முயர்மலர்கொண் டேவே
ளுலகை வருத்து முடன்று."

(2). ஒருவன் ஒரு காரியத்திற்குச் சாதனமாகக் கொண்ட பொருளை மற்றொருவன் அதற்குப்பகையாகியகாரியத்திற்குச் சாதனமாகக் கொள்ளுதல்.

உ-ம். "கண்ணாற் கொலப்பட்ட காமனையிக் காரிகையார்
கண்ணாலுய் விக்கின்றார் காண்."

(3). ஒரு காரியத்தை உண்டாக்குதற்கு ஒருவரால் உட்கொளப்பட்ட பொருளான் மற்றொருவர் அதன் பகைக் காரியத்தை நன்றாகச் சமர்த்தித்தல்.

உ-ம். "உலுத்தன் மிடிவருமென் றுள்வெருவி நல்கா
னிலத்தென் றொருவ னிகழ்த்த - நலத்திசைகூர்
வள்ளலுமவ் வச்ச மருவியே நல்குமென
விள்ளலுற்றான் மற்றொருவன் மெய்."

## 46. காரணமாலையணி.

அஃதாவது, பின்பின்னாக வருவனவற்றிற்கு முன்முன்னாக வருவனவற்றைக் காரணங்களாகவேனுங் காரியங்களாகவேனுஞ் சொல்லுதல்.

உ-ம். "நீதியாற் செல்வ நிகழ்செல்வத் தாற்கொடைமற்
றேதுகொடை யாற்சீ ருள."

இதில், நீதி முதலியன செல்வ முதலியவற்றிற்குக் காரணமாதல் காண்க.

"படர்நரகம் பாவத்தாற் பாவ மிடியான்
மிடியீவி லாமையினா மே."

இதில், நரகமுதலியன பாவ முதலியவற்றிற்குக் காரியமாதல் காண்க.

## 47. ஒற்றைமணிமாலையணி.

அஃதாவது, பின்பின்னாக வருவனவற்றிற்கு முன்முன்னாக வருவனவற்றை விசேஷியங்களாகவேனும் விசேஷணங்களாகவேனுஞ் சொல்லுதலாம். இதனைவடநூலார் ஏகாவளியலங்காரமென்பர்.

உ-ம். "மன்னிவன்கண் காதளவுங் காதுதோண் மட்டியையுந்
துன்னுறுதோள் சானுத் தொடும்."

இதில், கண் முதலியன விசேஷியம்.

"நிறைவெளியு மதிலியங்கு தினகரனு
மவன்கதிர்சேர் நிலவு மன்றோன்
குறைவில்பிறப் பிடமாய புனலுமத
னதுபித்தக் கூறுந் தீயு
மறைநெறியி னதனிலவி வழங்குபுரு
டனுமவற்குப் பிராண னாகி

யுறைவளியு மதுகொண்மண முறநிலனு
மாமிறையெட் டுநவுட் கொள்வாம்."

இதில், வெளிமுதலிபன விசேஷணம்.

## 48. மாலை விளக்கணி.

அஃதாவது, தீபகத்தையும் ஏகாவளியையுஞ் சேர்த்துச் சொல்லுதலாம். இதனை வடநூலார் மாலாதீபகாலங்காரமென்பர்.

உ-ம். "மனைக்கு விளக்க மடவாண் மடவா
டனக்குத் தகைசால் புதல்வர் - மனக்கினிய
காதற் புதல்வற்குக் கல்வியே கல்விதனக்
கோதிற் புகழ்சா லுணர்வு."

இதில், எல்லா வாக்கியங்களுக்கும் விளக்கமென்னும் ஒருசொல் முடிபாய் வருதலால் தீபகவிதியும், மடவாள் முதலியவற்றை முன் முன்னாகவரும் மனை முதலிபவற்றிற்கு விசேஷிபங்களாகச் சொல்லுதலால் ஏகாவளிவிதியும் வந்தன,

## 49. மேன்மேலுயர்ச்சியணி.

அஃதாவது, மேன்மேலும் ஒன்றற்கொன்று உயர்குணத்தாலேனும் இழிகுணத்தாலேனும் உயர்வாதலைச் சொல்லுதலாம். இதனை வடநூலார் ஸாராலங்காரமென்பர்.

உ-ம். "தேன்மதுர மாமதனிற் றெள்ளமுத மேமதுர
மான்சொலதி னும்மதுர மாம்." இது உயர்வு.

"நீரினு நுண்ணிது நெய்யென்பர் நெய்யினும்
யாரு மறிவர் புகைநுட்பந் - தேரி
னிரப்பிடும்பை யாளன் புகுமே புகையும்
புகற்கரிய பூழை நுழைந்து." இது இழிவு.

## 50. நிரனிறையணி.

அஃதாவது, வரிசையாகச் சொல்லப்பட்ட பொருள்களுக்குச் சம்பந்தமுள்ளவைகளை அம்முறையே சொல்லுதலாம். இதனை வடநூலார் யதாசங்க்யாலங்காரமென்பர்.

உ-ம். "காரியலர்க்குந் தன்னிற் பிரியலர்க்கு மெங்கோன்
றெரிதுன்பு மின்புஞ் செயும்." என வரும்.

## 51. முறையிற் படர்ச்சியணி.

அஃதாவது, முறையாக ஒருபொருள் பல இடங்களிற் சென்றடைதலையேனும் ஓரிடத்திற் பலபொருள் சென்றடைதலையேனுஞ் சொல்லுதலாம். இதனை வடநூலார் பர்யாயாலங்காரமென்பர்.

உ-ம். "நஞ்சமே நீபண்டை நாளி னதிபதிதன்
னெஞ்சிலிருந் தாங்கதன்பி னீங்கியே - செஞ்சடிலச்
சங்கரனார் கந்தரத்திற் சார்ந்திக் கொடியோன்வாய்த்
தங்குதியிக் காலந் தனில்." எனவும்,

"முன்னா ளிருவர்க்கும் யாக்கையொன் றாக மூயங்கினம்யாம்
பின்னாட் பிரியன் பிரியையென் றாயினம் பேசலுறு
மிந்நாட் கணவன் மனைவியென் றாயின மெண்ணினினிச்
சின்னாளி லெப்படி யோமன்ன நீயிங்குச் செப்புகவே." எனவும்
வரும். முறையே காண்க.

## 52. மாற்றுநிலையணி

அஃதாவது, இழிவாகிய பொருளைக்கொடுத்து உயர்வாகிய பொருளை வாங்குதலைச் சொல்லுதலாம். இதனை வடநூலார் பரிவ்ருத்த் யலங்கார மென்பர்.

உ-ம். "சடாயு கிழவுடம்பைத் தான்கொடுத்துப் பெற்றான்
கெடாததொரு கீர்த்தி யுடம்பு."

## 53. ஒழித்துக்காட்டணி.

அஃதாவது, ஒருபொருளை ஓரிடத்து இல்லையென ஒழித்து மற்றோரிடத்து உண்டென்று நியமித்தலாம். இதனை வடநூலார் பரிசங்க்யாலங்கார மென்பர்.

உ-ம். "சிறைபடுவ புட்குலமே யன்றிநின் றேயத்
திறைவமக் கட்கு ளிலை" என வரும்.
"சிந்துநிசர் தானையாய் தீத்தொழிலைச் செய்வோர்க
ளந்தணரே நின்னாட் டகத்து."

இதில், ஒழிப்புச்சொல்லானது தொக்கு நின்றது.

## 54. உறழ்ச்சியணி.

அஃதாவது, சமானமாகிய வலியையுடைய இரண்டு பக்ஷங்களைக் காட்டி விகற்பித்தலாம். இதனை வடநூலார் விகல்பாலங்கார மென்பர்.

உ-ம். "தலையையே னும்விரைந்தெந் தார்வேந்தர்க் கோர்நின்
சிலையையே னும்வளைத்தல் செய்."

## 55. கூட்டவணி.

இதனை வடநூலார் ஸமுச்சயாலங்கார மென்பர். இவ்வணி இரண்டுவகைப்படும்.

(1). பகையில்லாமையால் ஒருகாலத்திற் கூடத்தக்க பொருள்களுக்குக் கூட்டத்தைச் சொல்லுதல்.

உ-ம்."நின்சீ ருருவு வெளிப்படுத னோக்கி நோக்கி நிலைதளரு
மென்பூ டுருக விளமுலைமேற் புல்லு முனிந்தாயென வருந்து
மன்போடே நீர்த்தனன்போ னகைக்குமகன்றுயெனவெளியிற்
பின்போ தருநல் லுணர்விழந்த பித்தர் போலப் பேதுறுமால்."

இதில், நிலைதளர்தல், புல்லல், நகைத்தல் முதலியன கூடின.

(2). பலகாரணங்கள் கூடுதலால் ஒரு காரியம் பிறத்தல்.

உ-ம். "குலமு முருவுங் குணமுந் திருவு
நலமுமுயர் கல்வி நயமும் - வலமுஞ்
செருக்ககவிளைக் கின்றனவிச் செம்மற்கு நாளுந்
திருக்கறுநன் மாண்பிற் செறிந்து."

## 56. வினைமுதல் விளக்கணி.

அஃதாவது, ஒரு கர்த்தாவைச் சேர்ந்த முறையுள்ள பலசெய்கைகளை முறைபிறழாமற் சொல்லுதலாம். இதனை வடநூலார் காரகதீபகாலங்காரமென்பர்.

உ-ம். "துயில்கின்றான் வாசநீர் தோய்கின்றான் பூசை
பயில்கின்றான் பல்சுவைய வுண்டி - யயில்கின்றான்
காவலனென் றோங்குகடை காப்பவராற் றள்ளுணுமிப்
பாவலரைப் பொன்னேகண் பார்." என வரும்.

## 57. எளிதின் முடிபணி.

அஃதாவது, ஒருவன் செயத்தொடங்கிய காரியம் மற்றொரு காரண உதவியால் எளிதில் முடிதலாம். இதனை வடநூலார் ஸமாத்யலங்காரமென்பர்.

உ-ம். "மதிநுதலாட் கியானூடன் மாற்றத் தொழும்போ
துதவிமுகில் செய்தன் றொலித்து."

## 58. விறல்கோளணி.

அஃதாவது, வலியுடைய பகையின்மேலாதல் அதனது துணையின்மேலாதல் பராக்கிரமித்தலைச் சொல்லுதலாம். இதனை வடநூலார் ப்ரத்யநீகாலங்கார மென்பர்.

உ-ம். "வண்டினந்தே னூட்டுமரை வாட்டவிற்சிற் றங்கொடுபோ
கண்டதுதிங் கட்குக் களங்கு." இது பகை. [ய்ச்

"தாக்குவிழிக் குத்துணையாய்ச் சார்ந்திலங்கு காதைக்கீ
ழாக்கிநின்ற நீலத் தலர்." இது பகைத்துணை,

## 59. தொடர்நிலைச் செய்யுட்பொருட்பேறணி.

அஃதாவது, ஒருபொருளைச் சொல்லத் தண்டாபூபிகா நியாயத்தினால் மற்றொரு பொருள் தோன்றுதல். தண்டாபூபிகா நியாயமாவது தண்டத்தை யபகரித்தலினால் அதனிற் சேர்த்து வைத்த அப்பம் முதலிய உணவு அபகரிக்கப்படுதலுந் தானே விளங்கல், இதனை வடநூலார் காவ்யார்த்தாபத்த் யலங்காரமென்பர்.

உ-ம். "மங்கைமுகந் திங்களையே வாட்டிற் றறைகுவதென்
பங்கயமென் போதுபடும் பாடு." என வரும்.

## 60. தொடர்நிலைச் செய்யுட் குறியணி.

அஃதாவது, சாதிக்கத்தக்க பொருளை வாக்கியார்த்தத்தினாலாயினும் பதார்த்தத்தினாலாயினும் அவ்விரண்டினாலுமாயினுஞ் சாதித்தலாம். இதனை வடநூலார் காவ்யலிங்காலங்காரமென்பர். இவ்வணி மூன்றுவகைப்படும்.

### (1). வாக்கியப் பொருட் செய்யுட் குறி.

உ-ம். "காம நினைவென்றேன் கண்ணுதலோ னென்மனத்தின்
மீமருவு கின்றான் விடாது."

இதில், பின்வாக்கியார்த்தத்தைக்கொண்டு வெல்லுதல் சாதிக்கப்பட்டது.

### (2). பதப் பொருட் செய்யுட் குறி.

உ-ம். "மிளிர்நீறே யீசன் விழிமணியே வாழி
தெளியுமையான் மீதணியுஞ் சேரா - லுளதாய
வின்பவொளி யைக்கவர்வீ டென்னுமோ கத்தழுந்தற்
கன்பினேன் செல்வே னமைந்து."

இதில், வீடடைதலை மோகமாகச் சொல்லுதல் அப்பிரசித்தமாகையால் அது சுகவொளியை யபகரித்தலென்னும் பதார்த்தத்தினாற் சாதிக்கப்பட்டது.

(3). இருமைச் செய்யுட் குறி.

உ-ம். "கலைதேர் புலமைநிறை காரிகைபா லோர்தன்
றலைமேற்கோட் பட்டதெக்கே சஞ்சீர் – நிலையதற்குப்
பேசுவிலங் காங்கவரி பின்புறங்கொள் சாமரையை
யேசுறயார் சொல்வா ரிணை."

இதில், புலமையிற் சிறந்த காரிகைபாற் சிரமேற்கொளப்பட்ட தெக்கேசமென்னும் வாக்கியார்த்தமும் விலங்கு பின்புறங்கொண்ட என்னும் பதார்த்தமுஞ் சேர்ந்து காரிகைகூந்தற்குச் சாமரை யொப்பாகாமை சாதிக்கப்பட்டது.

## 61. வேற்றுப்பொருள் வைப்பணி.

அஃதாவது, பொதுப்பொருளாற் சிறப்புப் பொருளையுஞ் சிறப்புப்பொருளாற் பொதுப்பொருளையுஞ் சாதித்தலாம். இதனை வடநூலார் அர்த்தாந்தர ந்யாஸாலங்காரமென்பர்.

உ-ம். "நிறைவாரி யைத்தாண்டி நின்றா னநுய
னறைபெரியோர்க் கென்னோ வரிது."

இதில், பெரியோர்க்கு அரிது இல்லை யென்னும் பொருளால் அநுமன் கடலைத்தாண்டி நின்றான் என்னும் வர்ணியமாகிய சிறப்புப்பொருள் சாதிக்கப்பட்டது.

"ஊரங் கணனீ ருரவுநீர்ச் சேர்ந்தக்காற்
பேரும் பிறிதாகித் தீர்த்தமா – மோருங்
குலமாட்சி யில்லாருங் குன்றுபோ னிற்பர்
நலமாட்சி நல்லாரைச் சார்ந்து."

இதில், முன்னிரண்டடியிற் சொல்லப்பட்ட சிறப்புப் பொருளால் பின்னிரண்டடியாலுஞ் சொல்லப்பட்ட வர்ணியமாகிய பொதுப்பொருள் சாதிக்கப்பட்டது.

"தாழ்ந்தோ ருயர்வ ரென்றுமிக வுயர்ந்தோர் தாழ்வ ரென்றுமறஞ்
சூழ்ந்தோ ருரைக்கு முரைகண்டா மதில்சூழ் கிடந்த தொல்லகழி
தாழ்ந்தோ ரனந்தன் மணிமுடிமே னின்றன் றுயர்ந்து தடவரையைச்
சூழ்ந்தோர் வரையினுதிப்பவன்றாட் கீழ்நின்றதுபோய்ச்சூழெயிலே."

இதில், பின்சொல்லப்பட்ட வர்ணியமாகிய சிறப்புப் பொருளால் முன்சொல்லப்பட்ட அவர்ணியமாகிய பொதுப் பொருள் சாதிக்கப்பட்டது. பிறவும் அன்ன.

## 62. மலர்ச்சியணி.

அஃதாவது, சிறப்புப்பொருளைச் சாதித்தற்குப் பொதுப்பொருளையும் மீட்டும் அப்பொதுப்பொருளைச் சாதித்தற்கு மற்றொரு சிறப்புப்பொருளையுஞ் சொல்லுதலாம். இதனை வடநூலார் விகஸ்வராலங்காரமென்பர்.

உ-ம். "தேடு மணிபலவுஞ் சேரிமைய மால்வரைக்குக்
கூடுபனி யாலோர் குறைவுண்டோ - நீடுபல
வின்குணத்திற் குற்றமொன் றிந்து பலகதிரிற்
புன்களங்கம் போலடங்கிப் போம்."

இதில், முன்னிரண்டடியிலுஞ் சொல்லிய சிறப்புப் பொருளைச் சாதிக்கப் பலகுணங்களில் ஒரு குற்றம் மறையுமென்னும் பொதுப்பொருளைச் சொல்லி அதைச் சாதித்தற்குச் சந்திரகிரணங்களிற் களங்கம்போ லென்னுஞ் சிறப்புப்பொருள் கூறப்பட்டது.

## 63. கற்றோர் நவிற்சியணி.

அஃதாவது, மிகுதிக்குக் காரணமாகாதவைத அதற்குக் காரணமாகச் சொல்லுதலாம். இதனை வடநூலார் ப்ரௌடோக்த்யலங்கார மென்பர்.

உ-ம். "தக்கவிவள் கண்யமுனை தன்னி லலர்குவளை
யொக்குங் கருமை யுள."

இதில், குவளையின் கருமைமிகுதிக்கு ஏதுவாகாத யமுனையிற் பிறத்தல் ஏதுவாகச் சொல்லப்பட்டது.

"ஐந்தாரு வின்மலர்த்தா தங்காம தேனுவின்பால்
சிந்தா மணியினொளி சேர்த்தனத - னந்தா
வுயிர்ப்பினொடு சங்கநிதி யுள்வெளியைத் தாலும்
வியப்பவிவற் றந்தான் விதி." இதுவும் அது.

## 64. உய்த்துணர்வணி.

அஃதாவது, ஒருகாரியம் முற்றுப்பெறுதற்கு இஃது இவ்வாறுபெனின் என ஊகித்தலாம். இதனை வடநூலார் ஸம்பாவநாலங்கார மென்பர்.

உ-ம். சேடுறுநங் கோன்புகழைச் சேடனவி லத்தொடங்கிற்
பீடுறவே முற்றுப் பெறும்."

## 65. பொய்த்தற்குறிப்பணி.

அஃதாவது, ஒரு பொருளைப் பொய்பாக்குதற்கு மற்றொரு பொய்ப் பொருளைக் கற்பித்தலாம். இதனை வடநூலார் மித்யாத்யவஸித்யலங்கார மென்பர்.

உ-ம். "வான்பசுந்தோல் போர்த்துருட்ட வல்லோன் பசுபதியைத்
தான்பரவா தெய்துறூஉம் வீடு."

"விண்மலர்த்தார் வேய்ந்தோனே வேசையரைத் தன்வசமாப்
பண்ணுதற்கு வல்லனென் பார்." என வரும்.

## 66. வனப்புநிலையணி.

அஃதாவது, வர்ணியத்தை விசேஷியமாக்கிக்கொண்டு வர்ணிக்கவேண்டிய வாக்கியார்த்தத்திற்கு ஒப்பாகிய மற்றொரு வாக்கியார்த்தத்தை வர்ணித்தலாம். இதனை வடநூலார் லலிதாலங்காரமென்பர்.

உ-ம். "பெருகறன்மூற் றும்போன பின்கரைகோ லற்கித்
திருவனையாள் வேட்டல் செயும்."

இதில், சிறிதன்போடு வந்த நாயகனை யிகழ்ந்து, மற்றொருத்தியிடத்தி லவன்போனபின்பு தன்னைத் தூதுவிட விரும்பிய நாயகியைக் குறித்துத் தூதி தான்சொல்ல வேண்டியதற்கொத்த நீர் போயபின் கரை கோலல் கூறினாள்.

## 67. இன்பவணி.

இதனை வடநூலார் ப்ரஹர்ஷணாலங்கார மென்பர். இவ்வணி மூன்றுவகைப்படும்.

(1). முயற்சியின்றி விரும்பப்பட்ட காரியஞ் சித்தித்தல்.

உ-ம். "தன்னா யகன்விழைந்த தையலையே தூதாக
வன்னான்க ணுய்த்தா ளணங்கு."

(2.) விரும்பப்பட்ட பொருளினும் அதிகமாகிய் பொருள் சித்தித்தல்.

உ-ம். "மழுங்குவிளக் கைத்தூண்ட மங்கையெழும் போது
செழுங்கதிர்தோன் றிற்றிருள்கால் சீத்து."

(3). உபாயஞ் சித்தித்தற்பொருட்டுச் செய்யும் முயற்சியாற் பலமே சித்தித்தல்.

உ-ம். "தங்கு நிதியஞ் சனமூ லிகையகழ்ந்தோ
னங்குநிதி யேகண்டா னன்று."

## 68. துன்பவணி.

அஃதாவது, விரும்பப்பட்ட பொருளைக்குறித்து முயற்சிசெய்ய அதற்குப் பகைப்பொருள் கிடைத்தலாம். இதனை வடநூலார் விஷாதநாலங்கார மென்பர்.

உ-ம். "சோருஞ் சுடர்விளக்கைத் தூண்டு கையிலவிந்த
தாருமிடர் கூர வகத்து."

## 69. அகமலர்ச்சியணி.

அஃதாவது, ஒன்றன் குணகுற்றங்களான் மற்றொன்றற்கு அவை யுளவாதலைச் சொல்லுதலாம். இதனை வடநூலார் உல்லாஸாலங்காரமென்பர். இவ்வணி நான்கு வகைப்படும்.

(1). குணத்தினாற் குணத்தைச் சொல்லுதல்.

உ-ம். "இக்கற் பினணமூழ்கித் தூய்மைசெயு மோவெனையென்
றக்கங்கை கொள்ளு மவா."

இதில், கற்பினள் பெருமைக் குணத்தாற் கங்கைக்குப் பரிசுத்தகுணஞ் சொல்லப்பட்டது.

(2). குற்றத்தினாற் குற்றத்தைச் சொல்லுதல்.

உ-ம். "சினக்கதிர்வேல் வேந்தேநின் வெறவ்வர் மடவார்
வனத்திலடைந் தோடுங்கான் மாழ்கித் - தனத்திலுற
வைத்தபெருந் திட்பமடி வையாத நான்முகனை
மைத்தவிழி நீருகவை வார்."

இதில், பாதங்களின் மென்மைக் குற்றத்தால் வினைக முலைகளிற் கடினத்தைவைத்த நான்முகன் நிந்தை கூறப்பட்டது.

(3). குணத்தினாற் குற்றத்தைச் சொல்லுதல்.

உ-ம். "நாரூத் தகடேபோ னன்மலர்மேற் பொற்பாவாய்
நீரூய் நிலத்து விளியரோ - வேரூய
புன்மக்கள் பக்கம் புகுவாய்நீ பொன்போலு
நன்மக்கள் பக்கந் துறந்து."

இதில், நல்லோர் பெருமைக் குணத்தால் திருமகளுக்கு அவரையடையாமைக் குற்றங் கூறப்பட்டது.

(4). குற்றத்திஞற் குணத்தைச் சொல்லுதல்.

உ-ம். "கோடுவேற் கொற்றவநீ கொல்லாமை விட்டதுவே
சேவகர்க்குப் பேரு தியம்."

இதில், அரசன் கொடுமைக் குற்றத்திஞற் சொலேயின்றிப் புறம்போதற் குணஞ் சொல்லப்பட்டது.

## 70. இகழ்ச்சியணி.

அஃதாவது. ஒன்றன் குணகுற்றங்களால் மற்ருென்றற்கு அவை உளவாகாமையைச் சொல்லுதலாம். இதனை வடநூலார் அவஜ்ஞாலங்காரமென்பர். இவ்வணி இரண்டு வகைப்படும்.

(1). குணத்திஞற் குணமுண்டாகாமை.

உ-ம். "ஆழ வமுக்கி முகக்கினு மாழ்கடனீர்
நாழி முகவாது நாஞழி."

இதில், கடலின் பெருமைக் குணத்தால் நாழிக்கு அதிக நீர் கொள்ளலாகிய குணமுண்டாகாமை கூறப்பட்டது.

(2). குற்றத்தாற் குற்றமுண்டாகாமை.

உ-ம். "கமலமலர் தற்கண்டு கூம்புதலாற் காம
ரமுதகிர ணற்கென் குறைவு."

இதில், கமலங் கூம்புதற் குற்றத்தாற் சந்திரனுக்குக் குறைவாகிய குற்றமுண்டாகாமை கூறப்பட்டது.

## 71. வேண்டலணி.

அஃதாவது, குற்றத்தாற் குணமுண்டாதலைக் கண்டு அக்குற்றத்தைப் பிரார்த்தித்தலாம். இதனை வடநூலார் அநுஜ்ஞாலங்காரமென்பர்.

உ-ம். "வேண்டிரு நீறு புனையுமா தவர்க்கு
விருந்துசெய் துறுபெரு மிடியுங்
கொண்டநல் விரதத் தினைக்கும்யாக் கையுநீ
கொடியனேற் கருளுநா ளுளதோ."

## 72. இலேசவணி.

அஃதாவது, குற்றத்தைக் குணமாகவுங் குணத்தைக் குற்றமாகவுஞ் சொல்லுதலாம்.

உ-ம். "பறவைக ளெலாமனப் படியே திரிதரக்
குறைவிலிக் கிளிக்குக் கூட்டுச்
சிறைதீங் கிளவியிற் சேர்பய னுமே."

இது அரசனுக்கு இனியனாய்த் தன்னினீங்கி அவன் புறத்து நெடுநாளாக இருக்குங் கல்விசான்ற புதல்வனைப் பார்த்தற்கு விரும்பிய தந்தையாற் சொல்லப்பட்டது. இதில், மதுரச்சொல்லாகிய குணம் பஞ்சரச்சிறைக்குக் காரணமாகையாற் குற்றமாகவும், மதுரச்சொல் இல்லாமையாகிய குற்றம் வேண்டியவாறு திரிதற்குக்காரணமாகையாற் குணமாகவுஞ் சொல்லப்பட்டன.

## 73. குறிநிலையணி.

அஃதாவது, புகழ்பொருளை உணர்த்துஞ் சொற்களால் குறித்தறிதற்குத் தகுதியாகிய பொருளைச் சொல்லுதலாம், இதனை வடநூலார் முத்ராலங்கார மென்பர்.

உ-ம். "மந்தா கினியணி வேணிப் பிரான்வெங்கை மன்னவநீ
கொந்தார் குழன்மணி மேகலை நூனுட்பங் கொள்வதெங்ஙன்
சிந்தா மணியுந் திருக்கோ வையுமெழு திக்கொளினு
நந்தா வுரையை யெழுதலெவ் வாறு நவின்றருளே."

இதில், சிந்தாமணி முதலிய செய்யுள்குறிக்கப்பட்டன.

## 74. அரதனமாலையணி.

அஃதாவது, சொல்லத்தொடங்கிய பொருள்களை முன்பின் முறைவழுவாது வரச் சொல்லுதலாம். இதனை வடநூலார் ரத்நாவள்யலங்காரமென்பர்.

உ-ம். "உனதுயிர தாப முயிரிழந்த தெவ்வர்
மனைவியரா னேருறுப்பின் மண்ணுஞ் - சினவிழியி
னாரமுநெஞ் சிற்றீயு நாசியிற்கா லும்மறிவி
னூரும் வெளியுருவு மாம்."

இதில், பஞ்சபூதங்களும் முறைபிறழாமற் சொல்லப்பட்டன.

## 75. பிறிதின்குணம்பெறலணி.

அஃதாவது, ஒரு பொருளானது தன்குணத்தை இழந்து பிறிதொன்றின் குணத்தைக் கவர்தலாம். இதனை வடநூலார் தத்குணாலங்காரமென்பர்.

உ-ம். "இவண்மூக் கணிமுத் திதழொளியாற் பெற்ற
துவண்பதும ராகத் தொளி."

இதில், குணம்-சுவை ஒளி ஊறு ஓசை நாற்றம் முதலியன.

## 76. தொல்லுருப்பெறலணி.

இதனை வடநூலார் பூர்வரூபாலங்காரமென்பர். இவ்வணி இருவகைப்படும்.

(1). ஒன்று மற்றொன்றன் குணத்தை யடைந்திருந்து மீட்டுந் தனகுணத்தையே யடைதலாம்.

உ-ம். "நீத்தன் களக்கறையா னீலுருக்கொள் சேடனுஞ்சி
ருற்றடைந்தான் றன்முன் னுரு."

(2). ஒரு பொருள் விகாரத்தை யடைந்தபோதிலும் பூர்வதிசையைச் சொல்லுதலாம்.

உ-ம். "வளியால் விளக்கவிந்து மாதுளத்தி ஞண
மொளிமே கலைசெயலா லுண்டு." என வரும்.

"நின்னொடு முரணிய நிருபர்கா டழிந்து
மரசுக ளுறையிடத் தரசுக ளுறையு
மாவினம் பொருந்திட மாவினம் பொருந்து
மத்திகள் வாழிடத் தத்திகள் வாழு
முரசொலி கெழுயணி முன்றிற்
பரசுசீர் சிறந்த பண்புடை வேந்தே." இது சிலேடை.

## 77. பிறிதின் குணம்பெறுமையணி.

அஃதாவது, ஒரு பொருளானது தன்னோடு சம்பந்தி த்த பிறிதொன்றன் குணம் அடையாமையாம். இதனை வட நூலார் அதத்குணாலங்காரமென்பர்.

உ-ம். "புனைகழற்கா னங்கோன் புகழ்திசைவே ழங்க
ணனைமதத்திற் றோய்ந்து நயவார் - மனைவியர்வாட்
கண்மை யறத்துடைத்துங் காமர் மதிபோல
வெண்மையுடைத் தாய்விளங்கு மே."

புகழ் கரிதாகாமை காண்க.

## 78. தன்குணமிகையணி.

அஃதாவது, மற்றொன்றன் சார்பினாலே தனது இயற் கைக் குணம் மிகுதலாம். இதனை வடநூலார் அநுகுணாலங் கார மென்பர்.

உ-ம். "வார்செவிசேர் காவிமலர் மானனையாய் நின்கடைக்கட்
பார்வையினான் மிக்ககரும் பண்பு."

இதில், கடைக்கட் பார்வையின் சார்பினால் குவளையின் கருமைக்கு மிகுதல் சொல்லப்பட்டது.

## 79. மறைவணி.

அஃதாவது, பொதுக்குணத்தினால் இரண்டு பொருள்களுக்கு வேற்றுமை தோன்றாமையாம். இதனை வடநூலார் மீலிதாலங்கார மென்பர்.

உ-ம். "பேதமுறத் தோன்றாதிப் பேதையியற் கைச்சிவப்பார்
பாதமுற ஆட்டியசெம் பஞ்சு."

## 80. பொதுமையணி.

அஃதாவது, ஒப்புமையால் இரண்டு பொருள்களுக்கு விசேஷந் தோன்றாமையாம். இதனை வடநூலார் ஸாமாந்யாலங்கார மென்பர்.

உ-ம். "வண்பதும வாவி யடைந்தமட வார்வதனம்
பண்பி னறியப் படா."

## 81. மறையாமையணி.

அஃதாவது, பொதுக்குணத்தினால் ஒற்றுமையுடைய இரண்டு பொருள்களுக்கு ஒரு காரணத்தால் வேற்றுமை தோன்றுதலாம். இதனை வடநூலார் உந்மீலிதாலங்கார மென்பர்.

உ-ம். "ஒழுகுறு மாவி யீட்ட மொலியினு னகுவெண் டிங்கள்
பழகுறு முடற்க ளங்காற் பாகசா தனன்கூர்ங் கோட்டு
மழகளி றுமிழ்ம தத்தான் மலர்மிசைக் கடவு ளூர்தி
யழகுறு நடையா லன்றி யறிதரப் படாவக் குன்றில்."

இது கைலாச வர்ணனை.

## 82. சிறப்பணி.

அஃதாவது, ஒப்புமையாற் பொதுமையுற்றிருந்த இரண்டு பொருள்களுக்கு ஒரு காரணத்தால் விசேஷந் தோன்றுதலாம். இதனை வடநூலார் விசேஷகாலங்காரமென்பர்.

உ-ம். "விதுவெழலுஞ் சோர்வுறலான் மின்னார் முகத்திற்
பதுமமலர் வேறு படும்."

## 83. இறையணி.

இதனை வடநூலார் உத்தராலங்காரமென்பர். இவ்வணி இரண்டுவகைப்படும்.

### (1). மறைப்பு இறை.

அஃதாவது, ஓர் அபிப்பிராயத்தைத் தன்னுள் மறைத்து வைத்துக்கொண்டிருக்கின்ற உத்தரத்தைச் சொல்லுதலாம்.

உ-ம். "மாயையை யகன்று னடக்கக்காலெழுமோ
வாயிடை மாற்றமொன் றுண்டோ
போயொரு விடய முணமனம் வருமோ
பொருந்துறு பகலிர வுளவோ
காயமு முயிருங் கலந்துவாழ் வுறுமோ
கண்டன மெனவெனை யொருவர்
நீயறி வுறவிங் குரைப்பவ ருளரோ
நேரிழா யென்றன னிமலன்."

யாவை பிரிவு அப்பெயரினள் பிரிவுள் மறைந்தது.

### (2). வியப்பு இறை.

அஃதாவது, ஒரு வினவிற்கு அதனையே விடையாகவும், பல வினக்களுக்கு ஒன்றே விடையாகவுஞ் சொல்லுதலாம்.

உ-ம். "என்பணி பூண்டா னிறைவன்."

இதில், என்பணி யாது பூணெனவும், எலும்புப் பூணெனவுமாம்.

உ-ம். "மாதவன்கைக் கொள்வதெது மந்திரமீ சற்கேது
காதலுறு மஞ்சக் கரம்."

## 84. நுட்பவணி.

அஃதாவது, பிறர் கருத்தை யறிந்துகொண்டு கருத்தோடு கூடிய செய்கையால் எதிர்மொழி கொடுத்தலாம். இதனை வடநூலார் ஸூக்ஷ்மாலங்காரமென்பர்.

உ-ம். "காதலன் மெல்லுயிர்க்குக் காவல் புரிந்ததாற்
பேதைய ராயம் பிரியாத - மாதர்
படரிருள்கால் சிக்கும் பகலவனை நோக்கிக்
குடதிசையை நோக்குங் குறிப்பு."

இதில், மாதர் கூட்டத்தி லிருக்கின்ற தலைவி தலைவன் கருத்தை யறிந்து தன்செய்கையால் இரவிடை வருக வென்று சொல்லியது காண்க.

## 85. கரவுவெளிப்படுப்பணி.

அஃதாவது, ஒருவரது மறைத்த செய்கையை அதனைத் தான் அறிந்த கருத்தோடுகூடிய தன்செய்கையால் வெளிப்படுத்தலாம். இதனை வடநூலார் பிஹிதாலங்காரமென்பர்.

உ-ம். "கடிமனைக்குக் காலைவரு காவலற்குத் துஞ்சும்
படிவிரித்தா ளோரணங்கு பாய்."

இதில், காலையில் அமளி விரித்தலால் இராமுழுதும் பரத்தைய ரில்லிற் கண் துஞ்சாதிருந்தமை வெளிப்படுத்தப் பட்டது.

## 86. வஞ்சநவிற்சியணி.

அஃதாவது, ஒருகாரணத்தால் நிகழ்ந்த சத்துவமாகிய குணத்தை மற்றொரு காரணங்கூறி மறைத்தலாம். இதனை வடநூலார் வ்யாஜோக்த் யலங்காரமென்பர். சத்துவமென்பன: கண்ணீர் வார்தல் - புளகரும்பல் - வியர்த்தல் - நகைதோன்றல் முதலியவாம்.

உ-ம். "கல்லுயர்தோட் கிள்ளி பரிதொழுது கண்பனிசோர்
மெல்லியலார் தோழியர்முன் வேறென்று - சொல்லுவரா‌ற்
பொங்கும் படைப்பரப்பின் மீதெழுந்த பூந்துகள்சேர்ந்
தெங்கண் கலுழ்ந்தன வென்று."

இதில், சோழனைக்கண்ட மங்கையர் தாங்கொண்ட மயல்நோயினால் உளதாகிய கண்ணீர் வார்தலைச் சேனை பராகத்தால் உளதாயதெனத் தோழியர்க்கு மறைத்தது காண்க.

## 87. குறிப்புநவிற்சியணி.

அஃதாவது, ஒருபொருளைக் குறித்துச் சொல்லவேண்டியதை மற்றொரு பொருளைக் குறித்துச் சொல்லுதலாம். இதனை வடநூலார் கூடோக்த்யலங்காரமென்பர்.

உ-ம். "பிறன்புலத்தில் வாய்நயச்சொல் பெட்புடன்கொள் காளா
யிறைவனடை கின்றனன்விட் டேகு."

இதில், மறைவிடத்தில் பிறன்மனையாள் வாய்ச்சொல்லைக் கேளாநிற்கும் விடனைக்குறித்துச் சொல்லவேண்டியதைப் பிறன் விளைநிலத்தின் நெல்லை மேய்கின்ற எருதைக் குறித்துச் சொல்லியது காண்க. சொல் - நெல்லும் மொழியுமாம்.

## 88. வெளிப்படைநவிற்சியணி.

அஃதாவது, சிலேஷையான் மறைத்தபொருளைப் புலவன் வெளிப்படுத்தலாம். இதனை வடநூலார் விவ்ருதோக்த்யலங்காரமென்பர்.

உ-ம். "பிறன்புலத்தில் வாய்நயச்சொல் பெட்புடன்கொள் காளா
யிறைவனடை கின்றனன்விட் டேகு - துறையினெனப்
பண்பி னுணரப் பகர்ந்தான் குறிப்பாக
நண்பினுயர் பாங்க னயந்து."

## 89. யுத்தியணி.

அஃதாவது, தனது மர்மத்தை மறைத்தற்பொருட்டுச் செய்கையாற் பிறரை வஞ்சித்தலாம். இதனை வடநூலார் யுக்த்யலங்கார மென்பர்.

உ-ம். "மாணிழையா ளன்பன் வடிவைப் படத்தெழுதும்
பாணியிலங் கோர்சிலர்தன் பாங்குற - நாணிமுகங்
கோட்டினாள் சித்திரித்த கோலவுரு வின்கரத்திற்
நீட்டினாள் கன்னற் சிலை."

இதில், தன் கணவன் உருவைக் கருப்புவில்லெழுதி வேறுபடுத்திப் பிறரை வஞ்சித்தது காண்க. பாணி-காலம்.

## 90. உலகவழக்கு நவிற்சியணி.

அஃதாவது, உலகவழக்கச் சொல்லைத் தழுவிக்கொண்டு சொல்லுதலாம். இதனை வடநூலார் லோகோக்த்யலங்காரமென்பர்.

உ-ம். "அண்ணனி பேசாதைத் தாறுமா தம்வரையிற்
கண்ணைமூ டிக்கொண் டிரு."

## 91. வல்லோர் நவிற்சியணி.

அஃதாவது, அவ்வுலக வழக்கச் சொல்மேலே மற்றொரு பொருளை உட்கொண்டிருத்தலாம். இதனை வடநூலார் சேகோக்த்யலங்காரமென்பர்.

உ-ம். "பறிமலர்ப்பூன் குஞ்சியாய் பாம்பேபாம் பின்கா
லறியமுல கத்தென் றறி."

இது, ஒருவன் மற்றொருவன் செய்தியைத் தன்னைக் கேட்க, அதன் சமீபத்தி லிருக்கின்றவனைக்காட்டி இவனுக்கே அது தெரியுமென்று சொல்லுங் கருத்தை யுட்கொண்டிருத்தல் காண்க.

## 92. மடங்குதனவிற்சியணி.

அஃதாவது, ஒருவர் ஒருபொருளை அறிவுறுத்தற்குச் சொல்லிய சொல்லுக்கு மற்றொருவன் சிலேஷையினாலாதல் எடுத்தல் படுத்தல் முதலிய இசைவிகாரத்தினாலாதல் மற்றொரு பொருளைக் கற்பித்தலாம். இதனை வடநூலார் வக்ரோக்த் யலங்காரமென்பர்.

உ-ம். என்பிழைநெஞ் சிற்பொறுமென் றோதவர சென்பிழைசே
மன்பொறுக்கு நெஞ்சிலென்றாண் மாது.”

## 93. தன்மைநவிற்சியணி.

அஃதாவது, சாதி சுபாவ தருமத்தையாவது தொழிற் சுபாவ தருமத்தையாவது சொல்லுதலாம். இதனை வட நூலார் ஸ்வபாவோக்த்யலங்காரமென்பர்.

உ-ம். “அப்பூருஞ் செஞ்சடைமே லம்புலியைப் பார்த்துப்பார்த்
தெப்போதுஞ் சீத்துப்பூத் தென்னுமே - வெப்போடும்
வாலங்காட் டாநிற்கும் வாயங்கா வாநிற்கு
மாலங்காட் டான்பூ ணரா.” இது சாதித்தன்மை.

“புதுமணத்த காதலனும் பூவையும்புன் வாயி
லெதிருற்று நாண்டமர்கண் டெய்திக் - கதுமென்
றொருவர்க் கொருவர் வழிவிடப்பல் காற்பின்
னிருவரும்போய் மீள்வ ரெதிர்.” இது தொழிற்றன்மை.

## 94. நிகழ்வினவிற்சியணி.

அஃதாவது, முன் நடந்ததையேனும் பின் நடப்பதையேனும் அப்போது நடக்கிறதாகச் சொல்லுதலாம். இதனை வடநூலார் பாவிகாலங்காரமென்பர்.

உ-ம். “பிரிவுணர்ந்த வன்னாளப் பேதைவிழிக் கஞ்சஞ்
சொரிதரளம் யான்றூர நாட்டின் - மருவலுறு

மிப்போதுங் காண்கின்றே னென்செய்கோ விக்கிதற்குத்
துப்போது தோழீ சூழ்ந்து." இது நடந்தது.

## 95. வீறுகோளணி.

அஃதாவது, செல்வ மிகுதியை யேனும், புகழத்தக்க ஒரு சரித்திரத்தைப் புகழ்பொருளுக்கு அங்கமாகவேனுஞ் சொல்லுதலாம். இதனை வடநூலார் உதாத்தாலங்காரமென்பர்.

உ-ம். "மணிப்பொற் குழைகொண்டு கோழியெறி வாழ்க்கை
யணிப்பொற் கொடிகா ணவள்." இது செல்வமிகுதி.

"உமையா ளருந்தவஞ்செய் யொண்கச்சி யூரே
யெமையாள் பரமற் கிடம்."

## 96. மிகுதி நவிற்சியணி.

அஃதாவது, ஆச்சரியப்படத் தக்கதாகவும் பொய்யாகவும் இருக்கின்ற கொடை சௌரிய முதலியவற்றைப் புகழ்தலாம். இதனை வடநூலார் அத்யுக்த்யலங்காரமென்பர்.

உ-ம். "ஓதுபுகழ்த் தாதாவாய் நீயுறவிப் போதலகி
லாதுலர்கள் கற்பகமா னார்." இது பெருங்கொடை.

"உன்பிரதா பத்தழலின் வற்றுகட லொன்னலர்மா
னன்னவர்கண் ணீரினிறைந் தன்று." இது சௌரியம்;

## 97. பிரிநிலை நவிற்சியணி.

அஃதாவது, பெயர்ச்சொற்களுக்கு உறுப்பாற்றலான் மற்றொரு பொருளைத் தந்துரைத்தலாம். இதனை வடநூலார் நிருக்த்யலங்காரமென்பர்.

உ-ம். "நலரையில ராக்குபழி நண்ணுதலால் வேத
வலரவனென் றன்னையறை வார்."

## 98. விலக்கணி.

அஃதாவது, பிரசித்தமானதாகியும் அபிப்பிராயத்தோடு கூடியுமிருக்கின்ற விலக்கைச் சொல்லுதலாம். இதனை வடநூலார் ப்ரதிஷேதாலங்காரமென்பர்.

உ-ம். "சூதாடு வோய்சூத மன்று சொரிகணைகண்
மீதாடு பூசலிது மெய்."

இதில், போரிற் சூகத்தன்மையின் இல்லாமை பிரசித்தமாக உளதாகவும்,அன்றென்னும் விலக்கு நீ சூதாட்டத் தன்றிப் போரிற் சமர்த்தன் அல்லை யென்னும் இகழ்ச்சியை உட்கொண்டிருக்கின்றது. இது சகுனிக்குச் சொன்னது.

## 99. விதியணி.

அஃதாவது, பிரசித்தமாகிய பொருளின் விதியானது ஓர் அபிப்பிராயத்தோடு கூடிவருதலாம். இதனை வடநூலார் வித்யலங்கார மென்பர்.

உ-ம், "குயில்குயிலே யாகுங் குவலயத்திற் சீர்மிக்
குயர்வசந்த கால முறின்."

இது, குயிலுக்குக் குயிற்றன்மையை விதித்தல் வீணாய் இளவேனில் வரின் மதுரவோசையைச் செய்யுமென்பதை யுட்கொண்டிருக்கின்றது.

## 100. ஏதுவணி.

இதனை வடநூலார் ஹேத்வலங்கார மென்பர். இவ்வணி இரண்டு வகைப்படும்.

(1). காரணத்தைக் காரியத்துடன் சேர்த்துச் சொல்லுதல்,

உ-ம். "பெருந்திங்க டோன்றுமே பெய்வளையார் நெஞ்சிற்
பொருந்தூட றீர்த்தற் பொருட்டு,"

இதில், ஊடல் தீர்த்தல் - காரியம். தோன்றுதல் - காரணம்.

(2). காரணத்தையுங் காரியத்தையும் அபேதப்படுத்துச் சொல்லுதல்.

உ-ம். "கூர்கொணெடு வேலுடைநங் கோன்கடைக்கட் பார்வையே
சீர்கொள்கவி வாணர் திரு."

---

## சொல்லணி.

இனி, சொல்லணி மடக்குஞ் சித்திரமுமென இருவகைப்படும். இவை பொருளணிபோற் பெரும்பயனுடையவன்மையானும், விரிதலானுங் கூறிலம்.

---

மேற்சொல்லப்பட்ட அணிகளுள் செய்யுளகத்து இரண்டு முதலியன கூடிவரின், ஒருவா் அணியும் பல அணிகளின் கூட்டத்தைப்போல மிக்க அழகைச்செய்து நிற்றலால் வேறணியாகவே கொள்ளுதலுண்டு.

அது சேர்வையணியும் கலவையணியும் என இருவகைப்படும்.

### 1. சேர்வையணி.

அஃதாவது, எள்ளும் அரிசியுஞ் சேர்ந்தாற்போல விளங்குகின்ற பேதத்தையுடைய பல அணிகளது சேர்கையாம். இதனை வடநூலார் ஸம்ஸ்ருஷ்ட்யலங்காரமென்பர். இவ்வணி மூன்று வகைப்படும்.

(1). பொருளணிச்சேர்வை.

அஃதாவது, பொருளணிகள் பலசேர்ந்து வருதலாம்.

உ-ம். "காரிரு ளங்கங் களைப்பூசல் போன்றிடுமைம்
மாரியைவா னம்பெய் வதுமானும் - பேருலகிற்
றீயரைச்சேர்ந் தாங்கே சிறிதும் பயன்படா
வாயினவா லந்தோ விழி."

இதில், இரண்டு தற்குறிப்பும் ஓர் உவமையுஞ் சேர்ந்து வந்தமை காண்க.

## (2). சொல்லணிச்சேர்வை.

அஃதாவது, சொல்லணிகள் பலசேர்ந்து வருதலாம்.

உ-ம். "கந்தரங் கானக் தனிற்சென் றடங்கிலென் காசிக்கரே
கந்தரங் கானந்த நண்ணிலென் கன்னியர் கட்டளக
கந்தரங் கானந்த நின்று டெழிற்செந்தில் கண்டிறைஞ்சிக்
கந்தரங் கானந்த நல்கச் சனனங் கடந்திலரே."

இதில், நிரோஷ்டகமும் யமகமுங் கலந்து வந்தன.

## (3). சொற்பொருளணிச்சேர்வை.

அஃதாவது, சொல்லணியும் பொருளணியுஞ் சேர்ந்து வருதலாம்.

உ-ம், "ஆன்றூர்ந்த காவி னளியாடு பூந்தேன்
மான்றீன்ற வேரன் மணியீர்ங்க வுண்மாச்
சான்றோருங்கு கோட்டிற் றயங்குமணி முத்தோ
டேன்றூர்ந்து நாட்டி னடக்கவெழு மார்த்து."
"ஆன்றூர்ந்த காவினளி யாடுபூந் தேன்மான்
றீன்றவே ரன்மணி யீர்ங்கவுண் மாச் - சான்றோருங்கு
கோட்டிற் றயங்கு மணிமுத்தோ டேன்றூர்ந்து
நாட்டி னடக்கவெழு மார்த்து."

இது, ஒரேசெய்யுள் கலிவிருத்தமாகவேனும் வெண்பாவாகவேனும் வாசிக்கப்படுதலாற் பிறிதுபடுபாட்டு என்னுஞ்

சொல்லணியும், மலையினது பெருஞ்சம்பத்தைச் சொல்லுத லால் வீறுகோளென்னும் பொருளணியுமாம்.

## 2. கலவையணி.

அஃதாவது, பாலும் நீருஞ் சேர்ந்தாற்போல விளங் காத பேதத்தையுடைய பலவணிகளது கலப்பாம். இதனை வடநூலார் ஸங்கரமென்பர். இவ்வணி நான்குவகைப்படும்.

### (1). உறுப்புறுப்பிக்கலவை.

அஃதாவது, ஒன்று தலைமைத்தாயும் ஒழிந்தன தலை மையில்லனவாகியுங் கலந்துவருதலாம்.

உ-ம். "காற்றினசை தாருகிழல் கண்மதிய மென்னுமரி
யேற்றிற் றமிப்புண் டிடுகெருமை - தோற்றுருவி
னல்லெனுமால் யானை யவயவத்துண் டோவென்று
சொல்லுறவே தோன்றுந் துடித்து."

இதில், மதியம் என்னும் அரியேறு அல் எனும் மால் யானை என்னப்பட்ட இரண்டு உருவகங்களும் அவயவத் துண்டோ வென்னுந் தற்குறிப்பிற்கு உறுப்பாதலால், உறுப் பாகிய உருவகத்திற்கும் உறுப்பியாகிய தற்குறிப்பிற்குங் கலப்பாம்.

### (2). நிகர்தலைமைக்கலவை.

அஃதாவது, பலவணிகளுந் தலைமை யுடையனவாய்க் கலந்துவருதலாம்.

உ-ம். "அங்குலி யாற்கா ரோதிக் கற்றைநீக் குதல்போ லல்லைத்
திங்கடன் கதிரா னீக்கல் செய்துமு டுகண் போலும்
பங்கய மலர்ப டைத்துப் பாருல கதனின் மேய [றும்."
கங்குன்மான் முகஞ்சு வைக்கின் றனனெனக் கருத தோன்

இதில், உறுப்புகளாகிய இரண்டு உவமைகளாலுந் தோன்றுஞ்சந்திரனை வினைமுதலாகவுடைய இராத்திரியின் முகசும்பனத் தற்குறிப்பு, திங்களிலும் இராத்திரியிலுந் தலைவன் தலைவிகளின் செய்கை யாரோபமாகிய சுருங்கச் சொல்லலணியை உட்கொண்டே தோன்றுகின்றது. சுருங்கச் சொல்லலை உட்கொள்ளாமற் போனாற் சும்பனத் தற்குறிப்பிற்கு வேறோராதாரமில்லாமையால் இரண்டு உவமைகளுந் தற்குறிப்பையுஞ் சுருங்கச் சொல்லலையுஞ் சமமாகத் தோன்றச் செய்கின்றன; ஆதலால் அவ்விரண்டும் நிகராயின.

(3). ஐயக்கலவை.

அஃதாவது, இதுவோ அதுவோ வென்று ஐயுறப் பலி அணிகள் கலந்து வருதலாம்.

உ-ம். "அழற்கடுவாய் நாக மடியிலுள தேற்பல்
பழத்தருவா லுண்டோ பயன்.

இதில், பாம்பின் செய்தி வர்ணிக்கப்பட்டுக் கொண்டிருப்ப, அரச னரண்மனைவாயிலி லிருக்கும் கொடியோனது செய்தியுந் தோன்றுகின்றது. இங்கே பாம்பின் செய்தி வர்ணியமாகக் கொடியோனது செய்தி அவர்ணியமாயிற் சுருங்கச்சொல்லலாம்; அங்ஙனமன்றி, வர்ணியமாகிய கொடியோன் செய்தி தோன்றுதற்பொருட்டு அவர்ணியமாகிய பாம்பின்செய்தி சொல்லப்பட்டதென்றாற் புனைவிலி புகழ்ச்சியாம்; அங்ஙனமன்றிப் பார்க்கப்பட்டுக்கொண்டிருக்கின்ற பாம்பின் செய்தியை வர்ணித்தலாற் சமீபத்திருக்குங் கொடியோன் செய்தி வெளிப்படுத்தப்படின், இரண்டும் வர்ணியங்களாதலாற் புனைவுளிவிளைவாம்; என்று இவ்வாறு ஐயுற மூன்றணிகள் கலந்து வந்தமைகாண்க.

### (4). ஒரு தொடர்ப்பொருட்கலவை.

அஃதாவது, ஒரு பாட்டிற் சொற்களனைத்தும் ஒரு பொருளையே சொல்லாநிற்ப அப்பொருளில் இரண்டணிகளின் இலக்கணம் உண்மையால் அவ்விரண்டுந் தோன்றுதலாம்.

உ-ம். "சோலை வாயிற் சுடரு நிலாமணி
யால வாலத் தவிர்மதி யாற்புனல்
கால வாய்ந்த கதிர்மணி முல்லையின்
கோல நாண்மலர் கொய்வதற் கெய்தினள்."

இதனுட் சொல்லப்பட்ட பொருள் செல்வ மிகுதியைச் சொல்லுதலென்னும் இலக்கணத்தால் வீறுகோளும், சம்பந்தமில்லாதிருப்பச் சம்பந்தத்தைக் கற்பித்தலென்னும் இலக்கணத்தால் உயர்வு நவிற்சியுமாம்.

அணியிலக்கணம்

முற்றிற்று.



## மதராஸ் ரிப்பன் புஸ்தகசாலை,
## 273, தம்புசெட்டி வீதி, சென்னை.

| | | | |
|---|---|---|---|
| நைடதம் மூலமும் உரையும் (புதிய புதிப்பு) 27-லிதகிராப் படங்களும், ஒரு உயர்ந்த ஆப்டோன் படமும் ... | 2 | 0 | 0 |
| விநோதரசமஞ்சரி (புதிய பதிப்பு) கிலிட்டு பயிண்டு ... | 1 | 2 | 0 |
| தாயுமானவர் பாடல் (குறிப்புரையுடன்) சுவாமிகள் படத்துடன் (உயர்ந்த கிலிட்டு பயிண்டு) ... | 1 | 0 | 0 |
| அறப்பளீசுரசதகம் மூலமும் உரையும் ... ... | 0 | 10 | 0 |
| அறப்பளீசுரசதகம் மூலம் ... ... ... | 0 | 2 | 0 |
| குமரேசசதகம் மூலம்... ... ... ... | 0 | 2 | 0 |
| திருவேங்கடசதகம் மூலம் ... ... ... | 0 | 2 | 0 |
| தண்டலையார்சதகம் மூலம் ... ... ... | 0 | 1 | 0 |
| கோவிந்தசதகம் ... ... ... ... | 0 | 0 | 9 |
| எம்பிரான்சதகம் ... ... ... ... | 0 | 1 | 0 |
| சிவசங்கரசதகம் ... ... ... ... | 0 | 0 | 9 |
| ஷை ஏழுசதகமும் ஒரே கட்டடமாகிய சதகத்திரட்டு ... | 0 | 9 | 0 |
| குசேலோபாக்யானம் மூலம், பதவுரை, பொழிப்புரை, விசேஷவுரை (28-படங்களுடன்) ... ... | 3 | 0 | 0 |
| மேற்படி மூலம் (அரும்பதப் பொருளுடன்) ... | 0 | 6 | 0 |
| திராவிட பூர்வகாலக் கதைகள்... ... ... | 0 | 8 | 0 |
| திராவிட மத்தியகாலக் கதைகள் ... ... | 0 | 8 | 0 |
| தானவன் என்னும் போலீஸ் நிபுணன் கண்டுபிடித்த அற்புதக் குற்றங்கள் ... ... ... | 1 | 0 | 0 |
| ஸ்ரீ விருத்திப்பிரபாகரம் (வேதாந்த நூல்) ... ... | 4 | 0 | 0 |
| பஞ்சதசப் பிரகரணம் (வினாவிடை) ... ... | 1 | 0 | 0 |
| பக்தலீலாம்ருத வசனம் (82-பக்தர்களின் சரித்திரம்)... | 3 | 0 | 0 |
| பிரபோத சந்திரோதய வசனம் ... ... ... | 1 | 0 | 0 |
| பிரபுலிங்கலீலை வசனம் ... ... ... | 0 | 12 | 0 |
| குமாரதேவர் (மகாராஜா துறவு முதலிய) 16-சாஸ்திரம் | 0 | 10 | 0 |
| சூதசங்கிதை (தமிழ்ச்செய்யுள்) ... ... ... | 1 | 8 | 0 |
| அஷ்டப்பிரபந்த மூலம் (புதிய பதிப்பு) காலிகோ ... | 0 | 8 | 0 |
| ,, மார்பில் ... | 0 | 6 | 0 |
| மீனாக்ஷியம்மை பிள்ளைத்தமிழ் மூலம் ... ... | 0 | 2 | 0 |
| ஒருதுறைக்கோவை ... ... ... ... | 0 | 4 | 0 |
| ஔவைகுறள் ... ... ... ... | 0 | 2 | 0 |
| புட்பவிதியும், புட்பலனும் ... ... ... | 0 | 2 | 0 |
| யாப்பிலக்கண வினாவிடை ... ... ... | 0 | 2 | 0 |
| அணியிலக்கண வசனம் ... ... ... | 0 | 4 | 0 |